# இனிமை கொஞ்சும் சில நேரங்களில்...

உங்கள் உள்ளம் கவர்ந்த அவளுக்கு ஒன்றோ
அல்லது அத்தனையுமோ அன்புடன் கொடுங்கள்.
அவளுக்கு அன்புடன் கொடுப்பதற்கென்றே
உள்ள பாரியின் மிட்டாய் வகைகள்: சாக்லேட்
எக்ளேர்கள், கோகநட் எக்ளேர்கள்,
பைன் ஆப்பிள் லிக்கர்கள், ஆரஞ்சு லிக்கர்கள்,
லாக்டோ பான் பான்கள்
மற்றும் ஆரஞ்சு
கேண்டிகள்.




**வாழ்வில் இனிமை விரைந்து பரவிடவே-பாரீஸ்**

பாரீஸ் கன்பெக்ஷனரி லிமிடெட்
சென்னை 600 001.

PRS/2146




# கல்கி

அநல ஆண்டு
ஆவணி 13
ஆகஸ்டு 29
1976


"கல்கியில்" வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே சம்பவங்களும் கற்பனையே.



## போடு புதிர்!



ஒரு குடியானவன் கையில் நூறு ரூபாயுடன் ஆடு வாங்கப் போகிறான். ஆடுகளின் விலை பின்வருமாறு: ஆண் ஆடு 10 ரூபாய்; பெண் ஆடு 5 ரூபாய்; ஆட்டுக்குட்டி 50 பைசா. அவன் நூறு ஆடுகள் வாங்கினான். வாங்கின ஆடுகளில் ஆட்டுக் குட்டிகள் பெண் ஆடுகளைப் போல் பத்து மடங்கு இருந்தன. அவன் ஒவ்வொரு வகையிலும் எவ்வளவு வாங்கினான்?

—வி. எஸ். கிருஷ்ணமூர்த்தி

விடை:

| | | | |
|---|---|---|---|
| ஆண் ஆடு | 1 | ரூ. | 10 |
| பெண் ஆடு | 9 | ரூ. | 45 |
| ஆட்டுக்குட்டி | 90 | ரூ. | 45 |
| மொத்தம் | 100 | ரூ. | 100 |



### மெய்யன்பர்களுக்கு ஒரு வேண்டுகோள்

எல்லாம்வல்ல பராசக்தி பல கோவில்களில், பல வடிவங்களில் எழுந்தருளி யிருப்பினும், புரசைக்கு சற்று மேற்கே, கீழ்ப்பாக்கத்தில் ஸ்ரீ பாதாள பொன்னி அம்மன் என்னும் திருநாமத்தோடு எழுந்தருளி அன்பர்களுக்கு அருள்புரிந்து வருவது யாவரும் அறிந்ததே. மிகவும் பள்ளமான இடத்திலிருந்து கண்டெடுக்கப்பட்டு, பிரதிஷ்டை செய்யப்பட்டதால், "பாதாள பொன்னி அம்மன்" என்று வணங்கப் பட்டு வருகிறாள்.

பராசக்தியின் அருளாலும், பல பெரியோர்களது, முயற்சியாலும், பேருதவியாலும் பாதாள பொன்னி அம்மன் திருக்கோவிலில் கர்ப்பக்கிரகம், அர்த்த மண்டபம், மகா மண்டபம் முதலியன திருத்தி புதுப் பிக்கப்பட்டும் முன்மண்டபம், நுழைவு மண்டபம், மடப்பள்ளிக்கும் தேவஸ்தான ஆபீஸுக்கும் வேண்டிய கட்டிடம், விநாயகர் சன்னதி முதலியனபுதிதாகக் கட்டப்பட்டுள்ளன. நிகழும் அநல வருடம், ஆவணி மாதம், 14-ம் தேதி (30-8-1976) திங்கள்கிழமை காலை 4-30 மணிக்கு மேல் 6 மணிக்குள் 'அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம்' நடைபெற இருப்பதால், மெய்யன்பர்கள் தங்களால் இயன்ற அளவு பொருளுதவி செய்யவும் கும்பாபிஷேக வைபவத்தில் கலந்து கொண்டு அன்னை பராசக்தியின் அருட்கடாட்சம் பெறவும் வேண்டுகிறோம். பொருளுதவி செய்பவர்கள் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி ரசீது பெற்றுக் கொள்ளவும்.

இங்ஙனம்

**A. ராமநாத பிள்ளை, M.A.,**

நிர்வாக அதிகாரி, செயலாளர் & பொருளாளர்
மஹா கும்பாபிஷேகக் குழு, அருள்மிகு பாதாள
பொன்னி அம்மன் கோவில், சென்னை-600010

# நீடித்த அழகுக்கு உம்மிடியார்ஸ் நகைகளே. நிலையான மதிப்பீட்டிற்கும் உம்மிடியார்ஸ்தான்.

மனங்கவரும் டிசைன்கள்,
மாசுமருவற்ற வைரங்கள்,
வைரகற்கள் -
பதித்த ஆபரணங்கள்,
ஒளிவீசும் தங்க நகைகள்,
மற்றும் கலையழகு
மிளிரும் வெள்ளிப்
பாத்திரங்களைக் -
காணவருக !





எங்களது "நவரத்ன" சேமிப்பு திட்டத்தில் சேர்ந்து பயனடையுங்கள்.



தனிச்சிறப்பு பெற்ற நகைகளுக்கு ஒப்பற்ற ஸ்தாபனம்.

## உம்மிடியார்ஸ்

உம்மிடி ராமய்ய செட்டி, குருஸ்வாமி செட்டி அண்டு சன்ஸ்.
உம்மிடியார்ஸ் ஷாப்பிங் சென்டர்,
162, அண்ணாசாலை, சென்னை-600 002.
போன் : 89488 – 81607

ஞாயிறு விடுமுறை

VSK-V 205

# அள்ளித் தெளித்த அவசரக்கோலம்!

ஜனநாயக ரீதியான சட்டசபையின் விவாதங்களுக்கே இடமில்லாதபடி, செலக்ட் கமிட்டியின் பரிசீலனைக்கு வாய்ப்பே இல்லாத நிலையில் தமிழக நகர்ப்புற நில உச்சவரம்புச் சட்டம் நிறைவேறி விட்டது.

தாழ்த்தப்பட்ட மக்களை உயர்த்துவதோடு மட்டுமல்லாமல் ஓரளவு நல்ல நிலையில் உள்ள மக்களை அந்த நிலையிலிருந்து இறக்குவதும்தான் சோஷலிஸக் கோட்பாடு என்று அர்த்தம் பண்ணிக் கொண்டிருக்கும் ஒரு கட்சி ஆட்சியில் இருக்கும்போது பலவிதங்களில் நாம் உச்சவரம்புகளை எதிர்பார்க்க வேண்டியதுதான். அதற்கு நம்மைப் பழக்கிக் கொள்ளவும் வேண்டியதுதான்.

ஆனால் மெய்யாலுமே உச்சவரம்புகளின் நோக்கம் நிறைவேறுகிறதா?

விவசாய நில உச்சவரம்புச் சட்டம் வரப் போகிறது என்று அறிந்தவுடனேயே அதிலிருந்து தப்பிப்பதற்கு என்னென்ன வழிகள் உண்டு என்று நிலப் பிரபுக்கள் ஆராய்ந்தது போலவே, நகர்ப்புற நில உச்சவரம்புச் சட்டம் விஷயத்திலும் ஏராளமான மனைக் கட்டுக்களை வளைத்துப் போட்ட திமிங்கிலங்கள் சிந்தனை செலுத்தியிருக்கும். சட்ட பூர்வமான முறையிலேயே பாதுகாப்புக்களைத் தேடித் தங்கள் நகர்ப்புற நிலங்களைப் பத்திரப்படுத்திக் கொண்டிருப்பார்கள். அவற்றின் மீது தமக்குள்ள ஆதிக்கம் குறையாதபடி கவனித்துக் கொண்டும் இருப்பார்கள். ஹிந்துஸ்தான் டைம்ஸ் பத்திரிகையில் விளம்பரமே வந்தது: 'நகர்ப்புற நில உச்சவரம்பால் பாதிக்கப்பட்டிருக்கிறீர்களா? எங்களை யோசனை கேளுங்கள்' என்று!

சட்டத்தை ஏய்ப்பதற்கு உரிய மனமோ அல்லது சட்ட ஆலோசகர்களுக்கு அள்ளிக் கொடுக்கப் பணமோ இல்லாத மத்தியதர வகுப்பினர்தாம் உண்மையில் இதுபோன்ற உச்சவரம்புகளால் அதிகம் பாதிக்கப்படுகிறார்கள். இது போக, நகர்ப்புற நில உச்சவரம்புச் சட்டத்தில் பலவிதமான முரண்பாடுகள் காணக் கிடக்கின்றன.

உதாரணமாக ஆறு கிரவுண்டு நிலத்தில் ஒரு வீடு கட்டிக் கொண்டிருப்பவன் நிம்மதிப் பெருமூச்சுவிடலாம்; ஆனால் மூன்று கிரவுண்டு நிலத்தில் ஒரு வீடும் தனியே வேறு ஓர் இடத்தில் மூன்று கிரவுண்டு நிலமும் வைத்திருப்பவன் கன்னத்தில் கையை வைத்துக் கொண்டு உட்கார வேண்டியதுதான்! இதே போல் பிரிந்த ஹிந்து குடும்பங்களைவிடக் கூட்டு இந்துக் குடும்பங்கள் அதிகமான வேதனைக்கு உள்ளாகின்றன.

கணவனும் மனைவியும் தனித் தனியே வீடு வைத்திருந்தால் தப்பிப் பிழைத்தார்கள்; தனித் தனியே வீட்டு மனை வைத்திருந்தால் அகப்பட்டுக் கொண்டார்கள்!

கணவன் மனைவி இருவரையும் இணைத்து இருவருக்குமாகச் சேர்த்து இந்த உச்சவரம்புச் சட்டத்தை அமலாக்குவது பெண் இனத்துக்கு இழைக்கப்படும் அநீதியாகும். பெண்களுக்குச் சம உரிமை என்று கொட்டி முழக்கி, பெண்கள் ஆண்டும் பாரதத்தில் பிரமாதமாகக் கொண்டாடிய பிறகு, 'உன் கணவனுக்கு வீட்டு மனை இருப்பதால் நீ தனியே ஒரு மனைக்கு உரிமை கொண்டாடக் கூடாது' என்பது வெட்கக் கேடு!

நகர்ப்புற நில வரி விதிக்கப்பட்ட போதே மத்தியதர வகுப்பினரிடம் அதற்குப் பலத்த எதிர்ப்பு இருந்தது. ஏராளமாகக் கடன்பட்டு வீடு கட்டிய பலர் நகரசபைக்குச் செலுத்த வேண்டிய வீட்டு வரி, வட்டியோடுகூடிய கடன் தவணை, வீட்டைப் பாதுகாக்கும் செலவுகள் இத்தனைக்கும் மேல் நகர்ப்புற நில வரி வேறு கட்ட வேண்டியிருப்பதைப் பெரிய பாரமாகக் கருதினார்கள். நகர்ப்புற நிலத்துக்கு உச்சவரம்பு வந்த பின் நகர்ப்புற நில வரிக்கு அவசியமோ அர்த்தமோ இல்லை. அதனை நீக்கி விடலாம்.

ஆனால் நடந்திருப்பதோ இதற்கு நேர் மாறானது. நகர்ப்புற நிலங்களின் மதிப்பு பன்மடங்காக உயர்த்தி நிர்ணயிக்கப்

**கல்கி** மலர் 36 இதழ் 5



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

பட்டு அதற்கேற்ப வரியும் அதிகரித்திருக்கிறது.

நகர்ப்புற நில வரி விதிப்புக்கு நிலத்தின் மதிப்பு தற்போது சதுர அடிக்கு ரூ. 10 முதல் ரூ. 20 வரை என்று நிர்ணயித்துள்ளனர். நிலம் இருக்கும் குடியிருப்புப் பகுதியை அனுசரித்து மதிப்பு சதுர அடிக்கு ரூ. 10 முதல் ரூ. 20 வரை மாறுகிறது.

ஆனால் நகர்ப்புற நில உச்சவரம்புச் சட்டத்தின்படி நகரின் எந்தப் பகுதியில் நிலம் இருந்தாலும் அதற்கு நஷ்டஈடு தொகை சதுர அடிக்கு அதிகபட்சம் ரூபாய் ஒன்றுதான். அண்ணாசாலையானாலும் ரூபாய் ஒன்றுதான். புறநகர் பகுதியானாலும் ரூபாய் ஒன்றுதான். சிலருக்கு நஷ்டஈடே லாபகரமாகவும் பலருக்கு நஷ்டஈடு படு நஷ்டமாகவும் முடிகிற விசித்திர நிலை.

ஆய்ந்து பார்த்தால் இது போன்ற இன்னும் பல அசம்பாவிதங்களை இந்தச் சட்டத்தில் நாம் காண முடியும்.

இப்படி அள்ளித் தெளித்த அவசரக் கோலமாக ஒரு சட்டத்தை இயற்றி அதனை நெருக்கடி நிலைப் பிரகடனம் அளிக்கும் பலத்தில் நிறைவேற்றுவது ஜனநாயகப் பண்பாகாது.

# ஆபாசம் மடியட்டும்; ஆரோக்கியம் பெருகட்டும்!

குடும்பக் கட்டுப்பாடு பிரசாரமெல்லாம் இதுவரை செயற்கையான கருத்தடை அல்லது கருச் சிதைவு முறைகளுக்கே முக்கியத்துவம் தந்து வந்துள்ளது. கருச் சிதைவைவிடவும் கருத்தடை முறைகளே சிறந்தவை. கருச் சிதைவில் ஓர் உயிரை வாங்குகிற முறைகேடு இருப்பதுடன் ஆபத்தும் அதிகம்.

இவ்விரண்டையும் தவிர புலனடக்கம் என்ற மூன்றாவது முறையும் உள்ளதை அரசாங்கம் மறந்து விட்டதாகவே காண்கிறது. அண்ணல் காந்தியடிகளும் மேதை ராஜாஜியும் அடிக்கடி வலியுறுத்தி வந்த குடும்பக் கட்டுப்பாடு சாதனம் இதுவே.

சராசரி மனிதர்களுக்குப் புலனடக்கத்தைக் கடைப்பிடிப்பது ரொம்ப சிரமம் என்பதை நாம் மறுக்கவில்லை. என்றாலும் கருத்தடை முறைகள் பிரபலப்படுத்தப்படும் போதே புலனடக்கத்தின் அவசியமும் வலியுறுத்தப்படவில்லையானால் அபரிமித சம்போகத்தினால் மக்களின் ஆரோக்கியம் கெட வாய்ப்புண்டு.

இதனைத் தக்க சமயத்தில் நினைவூட்டி அழுத்தம் திருத்தமான தலையங்கம் எழுதியிருக்கிறார் * 'பவன்ஸ் ஜர்னல்' ஆசிரியர் திரு ராமகிருஷ்ணன்.

பெருவாரியான விற்பனையுள்ள பத்திரிகைகள், புத்தகங்கள் முதலியவற்றில் இடம் பெறும் கதைகளும் படங்களும் இன்று இனக் கவர்ச்சியையே பிரதானமாகக் கொண்டுள்ளன. திரைப்படக் காட்சிகள், பாடல்கள் பலவும் பாலுணர்வைத் தூண்டுவனவாகவே அமைந்துள்ளன. ஏன் 'ரெடிமேட்' சட்டை முதல் இரும்பு அலமாரி வரை எந்த விளம்பரம் செய்வதானாலும் அதில் விரசம் தொனிக்கிறது. இனக் கவர்ச்சியைவிட்டால் வியாபாரப் பெருக்கத்துக்கு வேறு வழியே இல்லை என்ற முடிவுக்குச் சகலரும் வந்துவிட்டது போல் காண்கிறது.

இவையெல்லாம் மக்களின் மனத்தையும் உடலையும் எப்படிப் பாதிக்கும் என்று யாருமே எண்ணிப் பார்ப்பதாகத் தெரியவில்லை. சம்போகத்தின்போது ஒருவன் இழக்கும் வீரியம் மூளையின் வளர்ச்சியைப் பாதிக்கும் என்பது ஏதோ பழங்கதையல்ல; விஞ்ஞான ரீதியாகவே இன்று நிரூபணமாகியிருக்கிறது. மாறாக பிரம்மச்சரிய விரதம் காப்பதால் வீரியச் சக்தியெல்லாம் மூளையின் ஆற்றலாக மாறுகிற வாய்ப்பு உண்டு.

எனவே, எதிர்கால இந்தியாவில் அறிவாற்றலும், சிந்தனை சக்தியும், ஆண்மையும், வீரமும், உடல் வலிமையும் போற்றிப் பாதுகாக்கப்படுவதுடன் பல்கிப் பெருகவும் வேண்டுமானால் அண்ணலின் அறிவுரையை மக்கள் மட்டுமின்றி அரசும் மறக்கக்கூடாது.

குடும்பக் கட்டுப்பாடு பிரசாரம் மக்களின் மன, தேக ஆரோக்கியங்களைப் பேணும் பிரசாரமாகவும் மாற வேண்டும். புலனடக்கத்தைக் கடைப்பிடிக்க அனுசரணையாக, தியானம், தேகப் பயிற்சி, யோகாசனம் முதலியவற்றில் மக்கள் ஈடுபாடு கொள்ளவும் திரும்பிய பக்கமெல்லாம் ஆபாசங்கள் அவர்கள் மனங்களைப் பாழ்படுத்தாதிருக்கவும் அரசாங்கம் ஆவன செய்யட்டும். *

* Bhavan's Journal, Annual Number 1976, Price Rs. 3; Bharatiya Vidya Bhavan, Munshi Sadan, Bombay-400 007.

# தமிழ் அறிஞர் மறைவு

ஆங்கிலம், தமிழ் இரு மொழி இலக்கியங்களிலும் புலமை பெற்றிருந்த திரு ஏ. வி. சுப்பிரமணிய அய்யர் மறைந்துவிட்டார்.. திருநெல்வேலிச் சீமையில் 1930ம் ஆண்டிலிருந்து 1965 வரையில் பொதுநலப் பணிகளிலும், கூட்டுறவுத் துறை நிர்வாகத்திலும் அங்கம் வகித்துச் சேவை செய்தவர். திருநெல்வேலி ரோட்டரி கழகத்தின் தலைவர், உதவித் தலைவர், காரியதரிசி பொறுப்புக்களை வகித்திருக்கிறார். 'ஹிந்து'வின் நீண்டநாளைய நிருபர். அவர் தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதிய நூல்கள் அனேகம். தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி, கவி பாரதியின் நினைவுகள், பண்டைத் தமிழ்நாடு போன்ற இவரது நூல்கள் பேரறிஞர்களின் பாராட்டுக்களைப் பெற்றுள்ளன. இவரது மறைவால் வருந்தும் இவரது குடும்பத்தினருக்கு ஆழ்ந்த அனுதாபங்கள்.

இந்திய நாளேடுகள்

கொழும்பு
மகாநாட்டுச்
செய்திகள்

COLOMBO, Aug 20

அளவுக்கு மீறிச்
சாப்பிட்டு
விட்டீர்கள்!

வாசகர்

வேண்டியமட்டும் நீயும்
சாப்பிட்டுங்கோ!...

தமிழ்நாடு

கர்நாடகம்

தி.மு.க. தேசீய சுதந்திரத்துக்கும்
ஒருமைப்பாட்டுக்கும் விரோதி அல்ல! —

கருணாநிதியின் சுதந்திர தினப் பேச்சு

பல் வைத்தியர்கள் கூறுகிறார்கள்-

# தவறாமல் பிரஷ்கொண்டு பற்களைத் துலக்குவதோடு, ஈறுகளையும் தேய்த்துக் கொடுத்தால், ஈறு உபாதைகளையும் பற்சிதைவையும் தடுக்கலாம்.

**போர்ஹென்ஸ பற்பசையைத் தவறாது உபயோகிப்பவர்கள் தாங்களே கூறுகிறார்கள்.**

"...பல் உபாதையால் அவதிப்பட்டு வந்த என் மனைவி ... போர்ஹென்ஸ் உபயோகிக்கத் தொடங்கினாள்...வியக்கத் தக்க பலன் விளைந்தது...இப்போது ஈறு உபாதையால் அவதிப்படும் மற்றவர்களுக்கும் அதை அவள் சிபாரிசு செய்கிறாள். இங்கிலாந்திலுள்ள என் சகோதரரும் 6 ட்யூப் இந்திய போர்ஹென்ஸ் கேட்டு அவசரச் செய்தி அனுப்பினார்..." (கையொப்பம்)

டி.ஜி.எம். டிசௌஸா, பம்பாய்

"...ராஜ மகேந்திரத்திலுள்ள ஒரு பல் வைத்தியர்...பற்களும் ஈறுகளும் வலுப்பெற... போர்ஹென்ஸ் உபயோகிக்கச் சொன்னார். உடனே அப்படியே செய்தேன். சில நாட்களிலேயே என் மூச்சுக் காற்றும் ஈறுகளும் நல்லபடியாயின. அது முதல் போர்ஹென்ஸ் என் உயிர். இப்போது என் குடும்பத்தினர் அனைவரும் (9 பேர்கள்) போர்ஹென்ஸ் உபயோகிக்கிறோம். இந்தப் பழக்கமும் நம்பிக்கையும் தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வரும் என்று நான் உறுதியாக நம்புகிறேன். (கையொப்பம்) பி.ஜே. லாஸர்

சிராலா, ஆந்திரப் பிரதேசம்

(மேற்கண்ட சான்றிதழ்களின் புகைப்பட நகல்களை ஜெப்ரி மேனர்ஸ் & கம்பெனி லிமிடெடின் எந்த அலுவலகத்திலும் காணலாம்).

**முறையான பற்பராமரிப்புக்கு, போர்ஹென்ஸ் கொண்டு இரவும் காலையும் உங்கள் பற்களைத் துலக்குவதோடு, ஈறுகளையும் தேய்த்துக் கொடுங்கள்.**

***இலவசம்!*** பற்களையும் ஈறுகளையும் பராமரிப்பது பற்றிய வண்ணப் புத்தகம், தபால் செலவுக்காக, 25 பைசா தபால் தலையுடன், போர்ஹென்ஸ் டென்டல் அட்வைஸரி ப்யூரோ, டிபார்ட்மெண்ட் கெ. T133 த. பை எண் 11463, பம்பாய் 400 020 என்ற முகவரிக்கு எழுதுக. எந்த மொழியில் வேண்டுமெனத் தெரிவிக்கவும்.







**போர்ஹென்ஸ்**

பல் வைத்தியரால் உருவாக்கப்பட்ட பற்பசை

160F-152 TM

# ஜீவகாருண்யம்



ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி
சங்கராசாரிய சுவாமிகள்



வேடன் ஒருத்தன் இருந்தான். அவன் காட்டிலே வலை வீசி ஒரு பெண் புறாவைப் பிடித்தான். அப்போது ஒரே இடியும் மழையுமாக வந்தது. இந்தப் புறாவும் அதன் ஜோடியான ஆண் புறாவும் வசித்த மரத்தடியிலேயே அவன் ஒண்டிக் கொண்டான். மழை நின்ற போது நல்ல இருட்டாகி விட்டது. ஒரே குளிர் வேறு. வேடனால் அங்கிருந்து புறப்பட முடியவில்லை. குளிரில் உடம்பெல்லாம் நடுங்க அங்கேயே ஒடுங்கி உட்கார்ந்து விட்டான்.

இதைப் பார்த்த மரத்தின் மேலிருந்த ஆண் புறா, தன்னுடைய பிரிய பத்தினியைப் பிடித்த பாபி நன்றாக அவஸ்தைப்படட்டும் என்று நினைக்கவில்லை. நேர் மாறாக, நம் தேசத்தின் விருந்தோம்பல் பண்பு முழுதும் அந்தச் சின்னப் பட்சியிடம் திரண்டு வந்து விட்டது. 'நாம் வசிக்கிற மரத்தின் கீழ் இவன் வந்துவி...ான். அதனால் இவன் நமக்கு அதிதி. அதிதி தேவோ பவ — விருந்தாளியைத் தெய்வமாக நினை என்பது வேத ஆக்ஞை. எனவே, அதிதிக்குத் தன்னாலான ஒத்தாசையைச் செய்ய வேண்டும்' என்று நினைத்தது.

முதலில், குளிரில் நடுங்குகிறவனுக்குக் கணப்பு மூட்ட வேண்டும் என்று நினைத்தது. தன் கூட்டையே பிரித்து, அதிலிருந்த காய்ந்த குச்சிகளை வேடனுக்கு முன்னால் கொண்டு வந்து போட்டது. தன் வீடு போனாலும் சரி, அவனுக்குச் சௌகரியம் பண்ணித் தர வேண்டும் என்ற உத்தமமான எண்ணம்.

'சிகிமுகி' கல் என்று ஒன்று உண்டு. ''சிக்கி முக்கி'' என்று பேச்சு வழக்கில் சொல்கிறார்கள். 'சிகி' என்றால் நெருப்பு என்று அர்த்தம். 'சிகை' உள்ளதெல்லாம் 'சிகி' தான். சிகையை விரித்துக் கொண்டு ஆடுகிற மாதிரிதானே நெருப்பு பல ஜ்வாலைகளை நீட்டிக் கொண்டு கொழுந்துவிட்டு எரிகிறது? 'முகம்' என்றால் வாய். வாயில் நெருப்பை உடைய கல்தான் 'சிகிமுகி'.

இப்படிப்பட்ட சிகிமுகிக் கற்களைப் புறா தேடிக் கொண்டு வந்து போட்டது.

வேடன் அவற்றை ஒன்றோடொன்று தட்டி நெருப்பு உண்டாக்கி அந்த நெருப்பில் சுள்ளிகளைப் பற்ற வைத்துக் குளிர் காய்ந்தான்.

தனக்குப் புறா இத்தனை உபகாரம் செய்ததும் வேடனுடைய க்ரூர ஸ்வபாவம்கூட மாறி மனசு இளகிவிட்டது. தான் பிடித்திருந்த அதனுடைய பேடையை விட்டுவிட்டான்.

ஆனால் 'விருந்தோம்பல் என்றால் முக்கியமாக அதிதிக்குச் சாப்பாடு போடுவதுதான். இந்த வேடன் இங்கே நம் விருந்தாளியாக வந்துவிட்டுப் பட்டினி கிடந்தால் அதனால் நமக்கு மகா பாபம் ஏற்படும். இவனுடைய பசி ஆற்றுவதே நம் முதல் தர்மம்' என்று பெண் புறா நினைத்தது.

அவனுடைய ஆகாரத்துக்காக அது வேறு எங்கேயோ போய்த் தேடவில்லை. தானே இருக்கும்போது வேறு ஆகாரம் தேடுவானேன் என்று நினைத்தது. உடனேயே கொஞ்சம்கூட யோசிக்காமல், பரம சந்தோஷத்தோடு, அந்த அக்னியில் தானே விழுந்து பிரா...த் தியாகம் பண்ணி விட்டது.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த அதனுடைய ஜோடிப் பட்சியும் அந்த நெருப்பிலேயே விழுந்து தன்னை வதக்கிக் கொண்டது.

''என்பும் உரியர் பிறர்க்கு'' என்ற மாதிரி இப்படி உயிரையே தந்தாவது இன்னொருத்தருக்கு உபகரிக்க வேண்டும் என்ற தத்துவத்தை நம் மதக் கிரந்தங்களிலெல்லாம் நிறையச் சொல்லியிருக்கிறது.

அதிதியைத் தெய்வமாக நினைப்பது. அவனைக் கவனிக்காவிட்டால் தெய்வக் குற்றம் செய்த மாதிரி பயப்படுவது — இதெல்லாம் நம் மதத்தின் முக்கியமான அம்சங்களாகும்.

யமன் என்றால் நாம் எல்லோரும் கதி கலங்குகிறோம். அப்படிப்பட்ட யமனே கதி கலங்கி விட்டதாகக் கடோபநிஷத்தில் ஒரு கதையில் வருகிறது. அவன் யாரிடம் பயப்பட்டான்? ஒரு சின்ன பிராம்மணப் பிள்ளையிடம்தான் பயப்பட்டான்! ஏன் பயப்பட்டான்? இந்தப் பையன் யமனுடைய கிருஹத்துக்கு வந்து, மூன்று நாட்கள் யாரும் கவனிக்காமல் பட்டினி கிடந்து விட்டான்! (அவன் ஏன் வந்தான் என்பதெல்லாம் வேறு கதை.) அதிதியொருத்தன் அலட்சியப்படுத்தப்பட்டால் அது மகா அபசாரமாகுமே என்றுதான் சாக்ஷாத் யமனே பயந்து விட்டான். சர்வ லோகத்தையும் நடுங்கச் செய்கிறவன் இந்த வாண்டுப் பயலிடம் நடுங்கிக் கொண்டு வந்து, ''என் கிருஹத்தில் நீ மூன்று ராத்திரி சாப்பிடாமல் இருந்துவிட்டாய். இதனால் எனக்குத் தோஷம் உண்டாகாமல் இருக்க உனக்கு நமஸ்காரம் பண்ணுகிறேன் அப்பா. ஒவ்வொரு நாள் பட்டினி இருந்ததற்கும் ஈடாக ஒவ்வொரு வரம் வீதம், என்னிடம் நீ மூன்று வரம் வாங்கிக் கொள்'' என்று பிரார்த்தித்ததாக உபநிஷத்து சொல்கிறது.

இங்கெல்லாம் 'பரோபகாரம்' என்று செய்கிறபோது இருக்கக்கூடிய 'ஸுபீரியாரிடி' மனப்பான்மை இல்லாமல், உபகாரத்துக்குப் பாத்திரனாகிறவனிடம் பயந்து பயந்து தாழ்ந்து, தெய்வத்துக்குப் பூஜை செய்கிற மாதிரி அவனுக்கானதைச் செய்வதையே பார்க்கிறோம்.

பரோபகாரத்தில் ஒரு முக்கியமான அங்கமான ஈகையில் சிறந்தவர்களை நம் தர்மத்தில் தலைக்கு மேல் வைத்துக் கொண்டு கொண்டாடுகிறோம். எத்தனையோ துர்க்குணங்கள் இருந்தால்கூட கர்ணன் போன்றவர்களைக் கொடைக்காகவே போற்றுகிறோம். தமிழ் தேசத்திலும் வள்ளல்கள் என்று இவர்களைத் தெய்வத்துக்குச் சமானமாகக் கொண்டாடுகிற வழக்கம் தொன்றுதொட்டு இருந்து வருகிறது. ''கடையெழு வள்ளல்கள்'' என்று பாரி, அதியமான் முதலான ஏழு பேரைச் சிலாகித்துச் சொல்லியிருக்கிறது. (தொடரும்)

(1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது)



# ராஜாஜி: சிலைவழியும் இசைவழியும்!

உலகத் தலைவர்கள் பலருடன் பழக வாய்ப்புக் கிட்டியிருக்கிறது திரு சி. வி. நரசிம்மன் அவர்களுக்கு. ஐக்கிய நாடுகள் சபையில் பிரதமக் காரியதரிசி அலுவலகத்தில் மிகப் பொறுப்பு வாய்ந்த உயர் பதவி வகிப்பவருக்கு அத்தகைய வாய்ப்புக் கிட்டியதில் வியப்பில்லை. அவர் சொன்னார்: ''உலகத் தலைவர்கள் எத்தனையோ பேருடன் பழகியிருக்கிறேன்; ஆனாலும் ராஜாஜி அவர்களிடம் இருந்த அறிவுக் கூர்மையை இன்று வரையில் நான் வேறு யாரிடமும் கண்டதில்லை. அவர் பாரத ரத்தினம் மட்டுமல்ல; லோக ரத்தினம்!''

லோகரத்தினமானதால்தான் அமெரிக்க ஜனாதிபதி கென்னடியைச் சந்தித்து அணு ஆயுதப் பரிசோதனைக்கு வல்லரசுகள் முடிவு காண வேண்டும் என்று அவர் வாதாடினார். ''அந்தக் கோரிக்கை அவர் அமெரிக்கா சென்று திரும்பிய சில மாதங்களிலேயே நிறைவேறியது. கதிரியக்கம் பரவும் வகையில் பூமி மட்டத்துக்கு மேலே அணு ஆயுதப் பரிசோதனைகள் நிகழ்த்துவதற்கு முடிவு ஏற்பட்டது'' என்றார் திரு சி. வி. நரசிம்மன்.

ராஜாஜிக்குப் புது தில்லியில் சிலை நிறுவும் போது உலகத் தலைவர் ஒருவரையே போற்றி மகிழ்வதாகக் கொள்ளலாம் என்றாலும் தமிழ் மகனுக்கு அதிலே ஒரு தனிப் பெருமை உண்டு அல்லவா? எனவே சிலை எழுப்புவதற்கு ஆகும் இரண்டு லட்ச ரூபாய் செலவில் பாதியேனும் தமிழகத்தில் திரட்டப்பட வேண்டும் என்று விரும்பினார் திரு சதாசிவம் — ராஜாஜி சிலை நிர்மாணக் குழுவின் அமைப்பாளர். ஆனால் அவர் போட்ட திட்டத்துக்கு மேலேயே இதுவரை லட்சத்துப் பத்தாயிரம் ரூபாய்க்கும் மேல் சேர்ந்து விட்டிருக்கிறது! இதில் ஸ்ரீமதி எம். எஸ் அவர்கள் சுதந்திர தினத்தன்று நிகழ்த்திய உதவி நிதிக் கச்சேரியை யொட்டியே லட்சத்துப் பத்தாயிரம் ரூபாய்க்கு மேல் சேர்ந்திருக்கிறது. டிக்கெட் விற்பனை மூலம் ரூ. 46,428; நினைவு மலர் விளம்பரங்கள் வாயிலாக ரூ. 64,250. ''தேசத்தை எதிர்நோக்கியுள்ள பொருளாதாரக் கஷ்டங்களைப் பார்க்கும்போது, பல்வேறு பணிகளுக்கு ஏராளமாக நிதி திரட்டித் தரும் ஸ்ரீமதி எம். எஸ். இன்னமும் அரசுடைமையாக்கப்படாதது தான் எனக்கு வியப்பளிக்கிறது'' என்று திரு சி. வி. நரசிம்மன் குறிப்பிட்டபோது சபையில் ஒரே கலகலப்பு, சிரிப்பொலி!

ராஜாஜி சிலை நிறுவுவதில் தங்கள் பங்கும் இருக்க வேண்டும் என்ற பேராவலுடன் சென்னைக்கு அப்பாலுள்ள மக்களும் கல்கி காரியாலய விலாசத்தில் திரு சதாசிவத்துக்குப் பணம் அனுப்பிக் கொண்டே இருக்கிறார்கள். இவையெல்லாம் ராஜாஜி அவர்களின் பெருமைக்கு எடுத்துக்காட்டுக்கள் என்றாலும் திரு சதாசிவம் மேற்கொண்ட முயற்சியின் பெரு வெற்றி, அவர் ராஜாஜியிடம் கொண்டுள்ள அன்புக்கும் மரியாதைக்கும் அத்தாட்சி என்பதை நோக்குமிடத்தில் 'அவரை ராஜாஜியின் புதல்வர்களில் ஒருவராகவே—தலை மகனாகவே – கருதலாம்' என்று திரு வி. வி. நரசிம்மன் கூறியதும் பொருத்தமே. ராஜாஜி காலமானபோது, 'நான் அனாதையானதாக உணர்கிறேன்' என்று திரு சதாசிவம் தமக்குக் கடிதம் எழுதியதை நினைவுகூர்ந்தார் திரு சி. வி. என். இன்று தந்தைக்கு ஆற்றும்

ஒரு கடமையாக எண்ணி ஒரு மாபெரும் பொறுப்பை ஸ்ரீ சதாசிவம் மேற்கொண்டு நிறைவேற்றி வருகிறார்.

கணவர் எடுத்த காரியம் யாவினுக்கும் கைகொடுக்கும் ஸ்ரீமதி எம். எஸ்., அன்று நிகழ்த்திய உதவிக் கச்சேரிக்குத் தமிழக ஆளுநர் திரு சுகாதியா தலைமை வகித்துக் கௌரவித்தார். தாம் இளம் வயதில் காந்திஜியின் தலைமையால் ஈர்க்கப்பட்டுச் சுதந்திரப் போராட்டத்தில் குதித்த நாட்களிலேயே ராஜாஜியின் அறிவுக் கூர்மையையும் வாதத் திறமையையும் கண்டு வியந்ததை எடுத்துச் சொன்னார் ஆளுநர்.

புத்தியால் பிரச்னைகளை அணுகக் கற்றுக் கொடுத்தபோதே பக்தியால் ஆண்டவனை அணுகவும் கற்றுத் தந்தவர் ராஜாஜி. அதற்கு ஏற்பவே ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் தமது ஒவ்வொரு கச்சேரியையும் பக்தி ரசம் ததும்ப அமைத்து வருகிறார். சுதந்திர தினக் கச்சேரியின்போதும் அவ்வாறே தாமும் பரவசமாகிச் சபையோரையும் பரவசத்தில் ஆழ்த்தினார். அதோடு ராஜாஜிக்கு அஞ்சலி செலுத்தும் விதமாகச் சில விசேஷ அம்சங்களும் கச்சேரியில் இடம் பெற்றிருந்தன.

ராஜாஜி குறித்து திரு ரா. கணபதி இயற்றிய ஒரு சுலோகத்துடன் கச்சேரி ஆரம்பமாயிற்று. ''சத்திய தர்ம தியாக சாரம்'' என்று தொடங்கும் அந்த சுலோகத்தில் ராஜாஜியுடைய வாழ்க்கையின் சாரத்தையே வடித்துக் தந்திருக்கிறார் திரு கணபதி. கருத்துச் செறிவும் கவிதை நயமும் மிக்க இந்த சம்ஸ்கிருத சுலோகம் ஸ்ரீமதி எம். எஸ்ஸின் குரலினிமையுடன் குழைந்து வந்து சபையோரை எடுத்த எடுப்பிலேயே மெய் சிலிர்க்கச் செய்து விட்டது.

டைகர் வரதாச்சாரியாரின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடிக் கொண்டிருக்கிறோம் இந்த வருஷம். கவர்னர் ஜெனரல் ராஜாஜி கலாக்ஷேத்திரத்துக்கு விஜயம் செய்தபோது அவரை வரவேற்க டைகர் பொருத்தமான விதத்தில் தர்பார் ராகத்தில் ஒரு கீர்த்தனை இயற்றினார். அதனை ஸ்ரீமதி எம். எஸ். அன்று பாடியது அவ்விரு பெரு மகனார்களுக்குமே அஞ்சலியாக அமைந்தது.

ஐ. நா. சபையில் ஸ்ரீமதி எம். எஸ். பாடுவதற்கென்றே ராஜாஜி இயற்றிய ஆங்கிலப் பாடல் திரு ஹாண்டல் மான்யுவெலின் ஆர்கன் இசையுடன் இணைந்து கணீரென்று ஒலித்து மியூஸிக் அகாடெமி அரங்கை ஒரு தேவாலயமாகவே சில நிமிஷங்களுக்கு ஆக்கி விட்டது.

கச்சேரியின் இறுதிக் கட்டத்தில் திரு பி.ப. சோமு உருவாக்கிய விருத்தம் இடம் பெற்றது. எளிய சொற்களில் ராஜாஜியின் மறைவு நமக்கு ஏற்பட்ட பேரிழப்பு என்பதை எடுத்துக் கூறியது அச்செய்யுள்.

ராஜாஜி மறைந்தாரே யொழிய அவரது அறிவுரைகள் உலகை விட்டுப் போய்விடவில்லை. நம்முடனேயே நம் நலனை நாடி நின்று நிலைத்துள்ளன என்று உணர்த்தவே போல் விருத்தத்தைத் தொடர்ந்து ராஜாஜியின் குரல் அவையில் ஒலித்தது. 'பக்தி கலவாத வெறும் ஞானத்தால் பயனில்லை' என்பதைக் கூறும் ராஜாஜியின் சுருக்கமான ஆங்கில அறிவுரையை அடுத்து ஆதிசங்கரரின் பஜகோவிந்தம் பாடலை ஸ்ரீமதி எம். எஸ். பாடினார்.

ராஜாஜி எந்த லோக க்ஷேமத்துக்காக எழுதினாரோ, பேசினாரோ, பாடுபட்டாரோ அதே லோக க்ஷேமத்துக்காக சதா தவமிருந்து வரும் காஞ்சி முனிவர் லோக க்ஷேமத்தை முன்னிட்டே எழுதிய ''மைத்ரீம் பஜத'' பாடல் இந்தக் கச்சேரியில் ஒலித்த போது அதில் ஒரு விசேஷப் பொருத்தம் இருப்பதை உணர முடிந்தது.

புது தில்லியில் ராஜாஜி சிலை அமைவது இருக்கட்டும்; அன்று ஸ்ரீமதி எம். எஸ். கச்சேரி கேட்ட அனைவரது உள்ளங்களிலும் பூஜைக்குரிய புனிதரின் விக்கிரகத்தை இசையால் வடித்துத் தந்துவிட்டார்.

**-குட்டி கிருஷ்ணன்**

படங்கள்: ஆளுனர் பேசுகிறார். இடமிருந்து வலமாக திரு சித்ரா எஸ். நாராயணசுவாமி, திரு சி. வி. நரசிம்மன், ஆளுநர் திரு சுகாதியா, ராஜாஜி சிலை வடிக்கும் திரு கலாசாகரம் ராஜகோபால், சிலை அமைப்புக்குழுத் தலைவர் திரு பி. கே. தேவ்.

ராஜாஜியின் ஆங்கிலப் பாடலைப் பாடுகிறார் ஸ்ரீமதி எம். எஸ். ஸ்ரீமதி ராதா விசுவநாதனுடன். ஹாண்டல் மான்யுவெல் ஆர்கன் வாசிக்கிறார். கச்சேரிக்கு இதர பக்க வாத்தியம் வாசித்துச் சிறப்பித்தவர்கள்: அழகர்சாமி (வயலின்) காரைக்குடி மணி (மிருதங்கம்) நாகராஜன் (கஞ்சிரா) விநாயக்ராம் (கடம்).



# செல் நம்பர் 17





வேலிக்குள் பதினைந்து மாடிக் கட்டிடங்கள் நான்கு பதிந்து நின்றுகொண்டிருந்தன. அவைகளின் ஒவ்வொரு ஜன்னலுக்கும் ஒரு குடும்பம் என்று கணக்குப் போட்டால் தலைசுற்றும். கட்டிடங்கள் ஏதோ ஒரு பிரமை போல, பொய் போல, அப்போதுதான் தோன்றியது போல நின்றன. கட்டிடங்களின் இடைவெளியில் சதுரப் புல்வெளிகளில் நிறையக் குழந்தைகள் உற்சாகமாக விளையாடிக் கொண்டிருந்தன. இளம் பெண்கள் பந்து விளையாட்டுக்களில் குதித்துக் கொண்டிருந்தார்கள். வெயிலில் நின்று கொண்டிருந்தார்கள். பூப்பறித்துக் கொண்டிருந்தார்கள். நிறையப் பெண்கள், நிறையக் குழந்தைகள். ஆண்கள் அலுவலகத்துக்குச் சென்றிருந்த காலை பத்தரை மணி போலும்.

கட்டிடங்களைச் சுற்றி அமைந்திருந்த வேலி மிகவும் சிரத்தையுடன் இழுத்து விண் என்றுகட்டப்பட்டுச் சராசரிமனிதன் எவனும் கடக்க முடியாத உயரம் வரை எந்த இடத்திலும் இடைவெளியோ வெட்டோ இல்லாமல் நல்ல கற்புடன் ஆக்ரோஷமாக இருந்தது.

போதாக் குறைக்கு அங்கங்கே சிவப்பு அறிவிப்புகள் மண்டை ஓட்டுடன் warning high voltage என்று அறிவித்தன. யாருக்கும் அந்த வேலியைத் தொட விருப்பம் இருந்ததாகத் தெரியவில்லை. ஆனால் வேலியிலிருந்து சற்று ஆரோக்கியமான தூரத்தில் பல இளைஞர்கள் நின்றுகொண்டு வேலிக்கு உள்ளே வெயிலில் விளையாடிக் கொண்டிருந்த அந்தப் பெண்களை ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்களில் சிலர்... வேண்டாம்.

வாசுதேவன் கையில் குழந்தையுடன் கட்டிடங்களின் பிரதான கேட்டை விட்டு வெளியில் வருவதை அந்த இளைஞர்களில் ஒருவன் பார்த்து விட்டான். அவனுடன் மற்றச் சிலர் சேர்ந்து கொண்டு வாசுதேவனை அணுகினார்கள். வாசுதேவன் தன் குழந்தையுடன் சிரித்துப் பேசிக் கொண்டே நடந்தான். குழந்தை மிக புஷ்டியாக இருந்தது. அதன் கன்னங்களில் புது ரத்தம் சிவந்திருந்தது. அதன் முகத்தில் கவர்ன்மெண்ட் காஸ்மெட்டிக் தொழிற்சாலையின் முகப் பவுடர் நிறைய அப்பப்பட்டு அதன் அகில இந்திய வாசனை வாசுதேவனிடத்திலும் பரவியிருந்தது. வாசுதேவனின் கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியாத வயதுக் குழந்தை. எட்டு மாதம்.

வாசுதேவனை அந்த இளைஞர்கள் கூட்டமாக அணுகினார்கள்.

''ஹலோ'' என்றான் ஒரு சின்னப் பையன்.

''ஹலோ'' என்றார் வாசுதேவன்.

''பையனா பெண்ணா? பாப்பா அழகாக இருக்கிறது.''

''பையன்! மாமாவுக்கு டாட்டா சொல்லு.'' குழந்தை கையாட்டியது.

''ஐயா! உங்களிடம் கெஸ்ட் பாஸ் இருக்குமா?'' என்றான் இளைஞர்களில் ஒருத்தன்.

''ஏன்?''

'' இருக்குமா? எங்களுக்கு ஒரு பாஸ் வேண்டும்.''

''எவ்வளவு தருவீர்கள்?''

''முந்நூறு மானெக்ஷா.''

''அடேயப்பா உங்களுக்கு அவர்கள் கண்ணில் காசையே காட்ட மாட்டார்களே, எப்படி இவ்வளவு பணம் கிடைத்தது?''

''உங்களைப் போன்ற நபும்சகர்களிடம் அடித்துப் பிடுங்கியது.''

''டேய் சும்மா இருடா.''

வாசுதேவன் கோபத்துடன் ''பாஸ் கிடையாது'' என்றான்.

''இல்லையா?''

''இருக்கிறது. தர மாட்டேன். நீங்கள் உள்ளே வந்து ரகளை பண்ணுவீர்கள். பெண்களை....''

''கொடுக்கா விட்டால் அடித்துப் பிடுங்குவோம்.''

''முடியாது.''

''அழுக்குத் தலையா கொடு.'' அவர்கள் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள்.

''முடியாது.''

பிரசுரிக்க முடியாத வார்த்தைகளை உபயோகித்தார்கள். ''மரியாதையுடன் கொடுக்கப் போகிறாயா இல்லையா?'' அவர்கள் அவன் சட்டையைப் பிடித்தார்கள்.

வாசுதேவன் உடனே தன் சட்டைப் பையிலிருந்த ஊதலை எடுத்து ''ஊதட்டுமா ரையட் விஸில்!'' என்றான்.

அதைப் பார்த்த கணமே அவர்கள் வாசுதேவனை விட்டு விட்டார்கள். ஒதுங்கிக் கொண்டார்கள். அவர்கள் கண்களில் பீதி தெரிந்தது. ''ஐயா, ஐயா! ஊதாதே. ப்ளீஸ்! ப்ளீஸ்! வேண்டாம்.''

வாசுதேவன் அவர்களைப் பெருமிதத்துடன் பார்த்தான். தன் வாயருகே அந்த ஊதலைக் கொண்டு சென்றான். ''என்ன ஆகும் தெரியுமா? பாய்ந்து வந்து உங்களை அழைத்துச் செல்லச் சொல்லட்டுமா?''

''வேண்டாம் வேண்டாம். ஊதாதே! ஊதாதே!''

''ஒழிந்து போ.''

அவர்கள் அவனைச் சேவித்துவிட்டு நாடக பாணியில் அவனுக்கு உடல் வளைந்து வழிவிட வாசுதேவன் புன்னகையுடன் குழந்தையுடன் மெயின் ரோட்டுக்கு வந்தான்.

ஏராளமான ஜனங்கள் சாலையின் இருமருங்கிலும் நடந்து கொண்டிருந்தார்கள். நடப்பதற்கே போதிய இடமில்லாமல் ஒருவர்மேல் ஒருவர் அடிக்கடி முட்டி மோதிக் கொண்டு



போனார்கள். ஏராளமான சைக்கிள்களும் போராடின. அகலமான சாலை. இரண்டாகப் பிரிக்கப்பட்டு நடுவே ஒதுக்கப்பட்ட பகுதியில் பாட்டரி சக்தியில் ராட்சச பஸ்கள் ஜனங்கள் நிரம்பி வழிய விரைந்து கொண்டிருந்தன. ஒலிபெருக்கி சொல்வது எவருக்கும் புரியாத குழப்பம். கவரொட்டிகளில் அந்த ராணுவ உடை ஆசாமி ஒரே மாதிரி சிரித்துக் கொண்டிருந்தார். அடுத்த வாரத்திலிருந்து அதிக அளவு சோயா பீன்ஸ் என்று சந்தோஷமாக அறிவித்தது கவர்ச் செய்தித் தாள்.

சாலையின் மறுபுறத்துக்கு வந்த வாசுதேவன் சற்றுத் தூரம் நடந்து அரசாங்கத்தின் ஒன்பதாம் நம்பர் கட்டிடத்தை அடைந்தான். கீழே ஹாலில் ஜனங்கள் இலக்கற்ற திக்குகளில் சென்று கொண்டிருந்தார்கள். ரயில்வே ஸ்டேஷன் போல் இருந்தது. ஹாலின் நடுவே கெட்டியான கண்ணாடிப் பெட்டிக்குள் பைபிள் திறந்து வைத்திருந்தது. திறந்திருந்த குளியலறையிலிருந்து தீவிர அம்மோனியா வாசனை வந்தது. வாசுதேவன் 'தகவல்' பகுதிக்குச் சென்று தன்னிடமிருந்த கடிதத்தைக் காட்டினான். அந்த சிப்பந்தி குழந்தையைப் பார்த்ததுமே, ''நான்காவது மாடி இருபத்தி எட்டாம் எண் அறை. லிஃப்ட் உபயோகிக்காதீர்கள். படி வழியாகச் செல்லுங்கள்'' என்றான். லிஃப்ட்டுக்காகக் காத்திருந்த ஜன வரிசை கட்டிடத்துக்கு வெளிவரையில் சென்றது.

வாசுதேவன் நான்கு மாடிகளையும் சந்தோஷத்துடனேயே ஏறினான். தன் குழந்தையிடம், ''கொஞ்சம் கூட வலிக்காது. எறும்பு கடிக்கிறாற்போல 'சுருக்'; அவ்வளவுதான்!'' என்று பேசினான். குழந்தை சிரித்தது. மூன்றாவது மாடியில் மிக அதிகக் கூட்டம் இருந்தது. திருமண பர்மிட் என்கிற வாசலில் ரகளை நடந்து கொண்டிருந்தது. ஹெல்மட் அணிந்த போலீஸ் ஓர் ஆசாமியைத் தரதர வென்று இழுத்துச் செல்ல அவன் வாயில் ரத்தம் தெரிந்தது.

வாசுதேவன் செல்ல வேண்டிய இருபத்தி எட்டாம் நம்பர் அறையின் முகப்பில் 'இம்யூனைஸேஷன்' என்று எழுதியிருந்தது. உள்ளே இருபது இருபத்தி ஐந்து பேர்கள் பெஞ்சுகளில் உட்கார்ந்திருந்தார்கள். ஒவ்வொருவரிடமும் ஒரு குழந்தை இருந்தது. அவர்கள் எல்லோரிடமும் ஒரு மஞ்சள் கார்டு இருப்பதைக் கவனித்த வாசுதேவன் அருகில் சென்று 'இந்தக் கார்டு எங்கே கொடுக்கிறார்கள்?' என்று கேட்டான். ஓரத்தில் உட்கார்ந்திருந்த கிளார்க்கைக் காட்டினார்கள்.

அந்தப் பெண் ஒரு 'காமிக்' வாசித்துக் கொண்டிருந்தாள். அவள் முன் ஒரு 'டெலிடைப்' இருந்தது. அவளிடமிருந்து அரசாங்க காஸ்மெடிக் தொழிற்சாலையின் பவுடர் மணம் வீசியது.

வாசுதேவன் தன் கடிதத்தை நீட்ட, அவள் காமிக்கிலிருந்து கண் எடுத்தாள். வாசுதேவனைப் பார்த்தாள். பார்வையில் வெறுப்பு இருந்தது. வாசுதேவன் சிரித்தான். பதில் சிரிப்பைத் தேடினான்.

''பெயர்?''

''வாசுதேவன்.''

அவள் டெலிடைப் அடித்தாள்.

''ஸிடிஸன் கார்டு எண்?''

''வி667684321578.''

''திருமண பர்மிட் எண்?''

''வி.என் 768–1834111665.''

அவள் விரல்கள் டெலிடைப்பில் விளையாடின.

''இருங்கள்'' என்றாள். காமிக்கை எடுத்துக் கொண்டாள்.

சற்றுநேரத்தில் டெலிடைப் உயிர்பெற்றுத் தானாக அடிக்க ஆரம்பித்தது. அதை வாசுதேவன் தலையைத் திருப்பிப் படிக்க முயற்சித்தான்.

ASK CITIZEN TO REPORT TO Q DEPT WITH CHILD.

அவள் நிமிர்ந்து வாசுதேவனைப் பார்த்தாள்.

''என்ன?'' என்றான் வாசுதேவன்.

''உங்கள் திருமண பர்மிட்டைக் காண்பியுங்கள்.''

வாசுதேவன் அந்தச் சிவப்பு கார்டைத் தன் பையிலிருந்து தேடி எடுத்துக் காட்ட அதை மௌனமாகப் பார்த்து விட்டுத் திருப்பிக் கொடுத்தாள். ''உங்களை க்யூ டிபார்ட்மெண்டில் கூப்பிடுகிறார்கள்.''

''எதற்கு?''

''அங்கே போனால் தெரியும். நேராக இந்த வரிசையில் கடைசியில் இருக்கிறது. உடன் ஓர் ஆள் வருவான். அவனுடன் செல்லுங்கள்...''

செக்யூரிடி ஆசாமி ஒருவன் கூட வர வாசுதேவன் அந்தக்கடைசி அறைக்கு அழைத்துச் செல்லப்பட்டான். அறைக் கதவு திறந்த உடனேயே, ''மிஸ்டர்வாசுதேவன்'' என்றான் கண்ணாடி அணிந்த ஆசாமி. அவன் மேஜை சுத்தமாக இருந்தது. ''உட்காருங்கள்'' என்றான். இண்டர்காமைத் தட்டிவிட்டு ''நீலா, கொஞ்சம் வருகிறாயா?'' என்றான். மற்றொரு கதவு திறந்து சுமார் நாற்பது வயதுப் பெண் வந்தாள். ''குழந்தையைப் பார்த்துக்கொள்'' என்றான்.

அவள் ''வாடா கண்ணே'' என்று வாசுதேவனிடமிருந்த குழந்தையைக் கூப்பிடக் குழந்தை சந்தோஷத்துடன் அவள் மார்பில் பாய்ந்தது. அவள் அதை அணைத்துக் கொண்டு அதற்கு விளையாட்டுக் காட்டிக் கொண்டு உள்ளே சென்றாள்.

''எல்லோரிடமும் போவான். வேற்று முகம் கிடையாது'' என்றான் வாசுதேவன்.

''உட்காருங்கள்.''

''குழந்தைக்கு இம்யூனைஸேஷனுக்கு வந்தேன். என்னை மட்டும் இங்கே அனுப்பினார்கள்.''

''உங்கள் திருமண பர்மிட் எங்கே?''

வாசுதேவன் காட்டினான். கண்ணாடி ஆசாமி மேஜை விளக்கைத் தட்டி அதன் வெளிச்சத்தில் அதை ஆராய்ந்தான்.

''இது எப்படிக் கிடைத்தது உங்களுக்கு?''

''இந்தக் கட்டிடத்தில்தான் வாங்கினேன். ஏன்?''

''பணம் கட்டினீர்களா?''

''ஆம்.''

''எவ்வளவு?''

''ஐந்நூறு யானெக்ஷா.''

அவன் சிரித்தான்.

# பிறந்த 3ம் மாதம் தொடங்கும் முதல் திட உணவு குழந்தையின் வருங்கால வாழ்வையே தீர்மானிக்கத் தக்கது.

## பால் மட்டும் கொடுத்தால் போதாது என்கிறார்கள் டாக்டர்கள்



டாக்டர்கள் சிபாரிசு செய்வது

# ஃபாரெக்ஸ்®

**விரைவான முழு வளர்ச்சிக்கான**
**சரிவிகிதச் சத்து நிரவிய திட உணவு**



பச்சிளம் தேகமும் மூளையும் வேகமாக வளரத் துடிப்பவை. அதற்கு ஈடுகொடுக்கப் பால் மட்டும் போதுமானதாகாது. தாய்ப்பாலிலிருந்து கெட்டி உணவுக்கு மாறவேண்டும்—மூன்றும் மாதமே. மென்றுதின்னப் பழக்குங்கள்... மேன்மையான வளர்ச்சிக்குத் திறவுகோலாக உதவும் திட உணவு ஃபாரெக்ஸ் ஒன்றுதான்—பச்சிளம் ஜீரண உறுப்புகளுக்கு உகந்தது.

**டாக்டர்கள் சிபாரிசு செய்வது ஃபாரெக்ஸ்; காரணம்,**
தாய்ப் பால் விடுக்கும் தலையாய மாதங்களில் பாப்பாவின் பத்துவித வளர்ச்சிகளுக்கும் நிறைவுதரும் **ஒப்பற்ற சரிவிகிதச் சத்துணவு இதுவே.**

இரத்தச் செழிப்புக்கும் தெம்புக்கும் நல்லுசிதமான அளவுக்கு (இதுபோன்ற வேறெந்தத் திட உணவிலும் அமையாத அளவுக்கு) இரும்புச் சத்து; எலும்புக்கு உறுதியும், பல்லுக்குப் பலமும் தரும் கால்ஷியம், வைட்டமின் D2; மூளையும் உடலும் விரைந்து வளர உகந்த புரத சத்துக்கள்; வளரும் உடம்புக்குத் தேவையான சக்தி— இவ்வளவும் அடங்கியது ஃபாரெக்ஸ்; எனவே... பாலூட்டும் பழக்கத்தை மாற்றுவதற்கான வேறு எந்த திட உணவையும் விட அதிகமாக அதிகத் தாய்மார்கள் ஆதரிப்பது ஃபாரெக்ஸ். பழங்கள், காய்கறிகள், பருப்பு, இறைச்சி, முட்டை போன்ற எந்த முக்கிய உணவுடனும் கலந்து கொடுக்க இனிமையானது ஃபாரெக்ஸ். மென்றுதின்னப் பழக்க...கூடிய விரைவிலே குடும்ப உணவுகளிடம் குழந்தையை இனிதே வரவேற்க...

**அதி உன்னதமான முதல் திட உணவு ஃபாரெக்ஸ்.**

**இலவசமான எமது ஃபாரெக்ஸ் கைப் புத்தகம், 2-ரூபா தள்ளுபடித் திட்டம்— இரண்டையும் பற்றி அறிய, எழுதுங்கள்.**
(புத்தகம் எந்த மொழியில் எனக்கு குறிப்பிட்டு) உங்கள் பெயர், விலாசத்தை எழுதி, 25 பைசா தபால் வில்லையோடு அனுப்புக இம் முகவரிக்கு: தபால் பை நம்பர் 19119, பம்பாய் 400 025.




க்ளாக்ஸோ

LIL.GF. 53-140 TM

''ஏன்?''

''நீங்கள் எல்லாம் படித்தவர்கள். பொறுப் புள்ளவர்கள். உங்களுக்காக அரசாங்கம் எவ்வளவு செலவழிக்கிறது தெரியுமா? சில சாதாரண விதிகளைப் பற்றிக்கூட நீங்கள் தெரிந்து வைத்துக் கொள்ளவில்லை. திருமண பர்மிட்டுக்குப் பணம் கட்ட வேண்டியதில்லை. தெரியுமா உங்களுக்கு?''

''இல்லை. இங்குதான் ஓர் ஆசாமி வந்து பணம் கட்டாமல் கிடைப்பதற்கு வருஷக் கணக்கில் ஆகும். ஐந்நூறு கொடுத்தால் ஒரு மாதத்தில் கிடைத்து விடும் என்று சொல்லி....''

''ஐந்நூறு கொடுத்தீர்கள்...''

''இல்லை. கொடுப்பதாக ஒப்புக் கொண் டேன். பர்மிட் வந்த பிறகுதான் கொடுத் தேன்.''

''நன்றாக ஏமாந்திருக்கிறீர்கள். பர்மிட் போலி. இதே நம்பரில் நாலு பர்மிட்டுகள் இதுவரை கண்டுபிடித்திருக்கிறோம். இது ஒரு ஃபோர்ஜரி. க்யூ டிபார்ட்மெண்டின் முத்திரை இல்லை.''

''அப்படியானால்...''

''பர்மிட் இல்லாமல் கல்யாணம் செய்து கொண்டிருக்கிறீர்கள். குழந்தை வேறு பெற் றுக் கொண்டு விட்டீர்கள். அரசாங்கத்துக்கு எதிராகக் குற்றம்.''

''இல்லையே, அனுமதிக்கப்பட்ட காலத் துக்குப் பின்தான் குழந்தை பெற்றுக் கொண்டோம்.''

''முதலில் கல்யாணமே அனுமதிக்கப்பட வில்லையே! அரசாங்க ரிக்கார்ட்படி வாசு தேவன் கல்யாணமாகாதவர்! பர்மிட் வாங்கு வதற்கு முன் எங்களில் யாரையாவது கேட் டிருக்கக் கூடாது? பப்ளிக் ரிலேஷன் என்று கொட்டை எழுத்தில் போர்டு வாசலில் தொங்குகிறதே. அங்கு கேட்டிருக்கக் கூடாதா? 'இம்மாதிரி ஓர் ஆள் ஐந்நூறு மாமூல் கொடுத்தால் பர்மிட் சீக்கிரம் கிடைக்கும் என்கிறானே நிஜமா?' என்று கேட்டிருக்கக் கூடாதா? சேச்சே! என்ன வேலை செய்கிறீர்கள்?''

''இன்ஜினீயர்.''

''உங்கள் மனைவி?''

''வீட்டில் இருக்கிறாள். உள்ளே மச்சர் அவள்... இப்போது என்ன ஆகும்?''

''இந்தப் பர்மிட் உங்களிடமிருந்து எடுத் துக் கொள்ளப்படும். உங்கள் திருமண உரி மைகள் யாவையும் இழந்து விடுகிறீர்கள்.''

''மறுபடியும் 'எம்' ப்ளாக்குக்குப் போக முடியாதா?''

''முடியாது. உங்கள் லைசென்ஸ் எங்கே?''

''அய்யா, நான் தவறுதலாக அறியாமல் இதில் சிக்கிக் கொண்டு விட்டேன். எனக்கு ஒரு தாற்காலிக பர்மிட் கொடுத்துவிடுங்கள். நான் வீட்டுக்குப் போக வேண்டும். என் மனைவி காத்திருப்பாள்.''

''மனைவி? பர்மிட் இல்லாததால் அவள் உங்கள் மனைவி இல்லை. மிஸ்டர் வாசுதேவன், உங்களால் சர்க்காருக்குத் தலைவலிதான் அதி கம். ஆனால் நீங்கள் ஓர் இன்ஜினீயர். உங்கள் 'மனைவி' மச்சர். எனவே உங்களுக்குக் கொஞ் சம் வாய்ப்பு இருக்கிறது. நான் புதிய பெர் மிட்டுக்கு ஒரு மனு தருகிறேன். அதை நிரப்பி என்னிடம் கொடுங்கள். எங்கள் டிபார்ட்மெண்டிலிருந்துசிபார்சாகிப்போனால் மூன்று மாதத்தில் பர்மிட் கிடைத்துவிடும். இன்று என்ன தேதி? 18–6–'94. சரி செப் டம்பர் பதினெட்டாம் தேதி வந்து என்னைப் பாருங்கள்!''

''அதுவரை?''

''அதுவரை நீங்கள் வெளியேதான் இருக்க வேண்டும்.''

''என் மனைவியைப் பார்க்க முடியாதா?''

''முடியாது. உங்களால் சர்க்காருக்குச் சங் கடம் எவ்வளவு பாருங்கள். தப்பான, அனு மதிக்காத கல்யாணம் பண்ணிக் கொண்டு வேண்டாத பிரஜை ஒன்றைப் பெற்றுக் கொண்டு விட்டீர்கள். அதுவும் சர்க்கார் ஒவ்வொரு புதுப் பிறப்பையும் இவ்வளவு தூரம் கண்காணித்துக் கட்டுப்படுத்தும் போது... இனிமேலாவது ஜாக்கிரதையாக இருங்கள்.''

''குழந்தை?''

அவன் நாற்காலியில் சாய்ந்து கொண்டு வாசுதேவனை நிதானமாகப் பார்த்தான். ''மிஸ்டர் வாசுதேவன்! நம் சர்க்காரின் ரூல் நம்பர் பதினேழு தெரியாதா உங்களுக்கு... குழந்தை...''

''வேண்டாம்! அதைச் சொல்லாதீர்கள்!'' என்று அலறினான் வாசுதேவன்.

-கணையாழி ஆகஸ்டு '74.

# பார்த்திபன் கனவு

அமரர் கல்கி

அத்தியாயம் 7

## அருள்மொழித்தேவி

பொன்னனும் வள்ளியும் உறையூர்க் கோட்டை வாசலுக்கு வந்த அதே சமயத்தில், ராணி அருள்மொழித் தேவி அரண்மனை உத்தியான வனத்துக்குள் பிரவேசித்தாள். பல்லவ தூதருக்கு மகாராஜா கூறிய பதிலை ஏவலாளர்கள் உடனே வந்து மகாராணிக்குத் தெரிவித்தார்கள். மன்னர் வரும் வரையில் பொழுதுபோக்குவதற்காக ராணி உத்தியான வனத்துக்குள் சென்றாள். அவ்வனத்தில் சண்பக மலர்கள் அடர்ந்து வளர்ந்திருந்த ஒரு மூலைக்குப் போய் அங்கே அமைந்திருந்த பளிங்குக் கல் மேடையில் உட்கார்ந்து கொண்டாள்.

அங்கிருந்து பார்த்தபோது தெற்குத் திசையில் சூரியன் அஸ்தமனமாய்க் கொண்டிருந்த காட்சி அடிமரங்களின் வழியாகத் தெரிந்தது. மேல் வானம் முழுவதும் பத்தரை மாற்றுத் தங்கவிதானத்தைப் போல் தகதகவென்று பிரகாசித்தது. பார்த்துக் கொண்டிருக்கும் போதே தங்க நிறத்தின் சோபை மங்கிக் கொண்டு வந்தது; அடிவானத்தில் சூரியன் மறைந்தது. சற்று நேரத்துக்கெல்லாம் மேல் வானம் முழுவதும் ஒரே இரத்தச் சிவப்பாய் மாறிற்று. இந்தக் காட்சி அருள்மொழித் தேவிக்கு ரணகளத்தையும் அங்கே இரத்த ஆறு பெருக்கெடுத்து ஓடுவதையும் ஞாபகப்படுத்திற்று. தேவி நடுநடுங்கிக் கண்ணை மூடிக் கொண்டாள்.

மறுபடியும் அவள் கண்ணைத் திறந்து பார்த்த போது, வெள்ளி நிலவின் இன்பக் கிரணங்கள் மரக் கிளைகளின் வழியாக எட்டிப் பார்க்கத் தொடங்கியிருந்தன. ராணி உள்ளத்தில் பழைய ஞாபகங்கள் குமுறிக் கொண்டு வந்தன. பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்னால் பார்த்திப மன்னனுக்கு மாலையிட்டு இந்த அரண்மனைக்கு அவள் வந்தாள். அந்த நாளிலிருந்து இம்மாதிரி வெண்ணிலவு பிரகாசித்த எத்தனையோ இரவுகளில் அவளும் பார்த்திபனும் இந்த உத்தியான வனத்தில் கைகோத்துக் கொண்டு உலாவியதுண்டு. இந்தப் பளிங்குக் கல் மேடை மீது உட்கார்ந்து இருவரும் நேரம் போவதே தெரியாமல் இருந்ததுண்டு. அந்த நாளில் பார்த்திபன் சில சமயம் புல்லாங்குழல் கொண்டு வந்து பண் இசைப்பான். அருள்மொழி மெய்ம்மறந்து கேட்டுக் கொண்டிருப்பாள். கண்ண பெருமானே பார்த்திபனாக உருக் கொண்டு வந்து மணம் புரிந்ததாக எண்ணிப் பூரிப்படைவாள். இப்படிச் சில காலம் வாழ்க்கையே ஓர் இன்பக் கனவாகச் சென்று கொண்டிருந்தது.

பிறகு விக்கிரமன் பிறந்தபோது இன்ப வாழ்க்கையின் சிகரத்தை அவர்கள் அடைந்தார்கள். அதே உத்தியானவனத்தில் அதே பளிங்குக் கல்லின் மீது குழந்தையை மடியில் வைத்துக் கொண்டு கொஞ்சியதெல்லாம் அருள்மொழிக்கு நினைவு வந்தது. ஆஹா! அந்த ஆனந்தமான நாட்கள் அப்படியே நீடித்திருக்கக் கூடாதா?

ஆனால், எப்படியிருக்க முடியும்? பார்த்திபனுடைய இதயத்தின் அடிவாரத்திலே சொல்ல முடியாத வேதனையொன்று பதுங்கிக் கிடந்து அவனுடைய நெஞ்சை அரித்துக் கொண்டிருக்கையில், அவர்களுடைய ஆனந்த வாழ்க்கை எப்படி நீடித்திருக்க முடியும்? பார்த்திபனுடைய இந்த அந்தரங்க வேதனையை வெகு காலம் கழித்தே அருள்மொழி அறிந்தாள். அறிந்தது முதல் இந்த வேதனையில் அவளும்

பங்கு கொண்டாள். அதற்கு எவ்வளவு தூரம் நாமே காரணமோ என்று எண்ணி எண்ணி மனம் நொந்தாள்.

ஆமாம்; அவர்களுடைய கல்யாணத்தின்போதே அந்தக் காரணமும் ஏற்பட்டு விட்டது. அருள்மொழி, சேர வம்சத்தைச் சேர்ந்த ஒரு சிற்றரசன் மகள். அந்த நாளில் அவளைப் போல் சௌந்தரியவதியான ராஜகுமாரி இல்லையென்று தென்னாடெங்கும் பிரசித்தியாயிருந்தது. அவளைப் பார்த்திபனுக்கு மணம் செய்விக்க ஏற்பாடுகள் நடந்த பிறகு, காஞ்சி மகேந்திரவர்ம சக்கரவர்த்தியிடமிருந்து சேர மன்னனுக்குத் தூதர்கள் வந்தார்கள். பட்டத்து இளவரசர் நரசிம்மவர்மருக்கு அருள்மொழியைத் திருமணம் முடிக்க விரும்புவதாகச் சக்கரவர்த்தி செய்தி அனுப்பியிருந்தார். அருள்மொழியின் உற்றார் உறவினருக்கெல்லாம் இது பெரிதும் சம்மதமாயிருந்தது. ஆனால், அருள்மொழி அதற்கு இணங்கவில்லை; பார்த்திப சோழரையே பதியாகத் தன் மனத்தில் வரித்து விட்டதாகவும், வேறொருவரை மணக்க இசையேன் என்றும் கண்டிப்பாய்ச் சொன்னாள். மகேந்திர சக்கரவர்த்தி மிகவும் பெருந்தன்மை உள்ளவராதலால் அதற்கு மேல் வற்புறுத்தவில்லை. இளவரசர் நரசிம்மவர்மருக்குப் பாண்டியன் மகளை மணம் முடித்து வைத்தார்.

பார்த்திபனுக்கும் அருள்மொழிக்கும் மணம் நடந்த பிறகுதான் பார்த்திபனுக்கு மேற்கூறிய சம்பவம் தெரிய வந்தது. அவர் சிலசமயம், ''நீ சாம்ராஜ்ய சக்கரவர்த்தினியாய்க் காஞ்சி சிம்மாசனத்தில் வீற்றிருக்க வேண்டியவள்; அதற்கு மாறாக, இந்த உள்ளங்கை அகலச் சோழ ராஜ்யத்துக்கு ராணியாயிருக்கிறாய்'' என்று சொல்வதுண்டு. முதலில் இதை ஒரு விளையாட்டுப் பேச்சாகவே அருள்மொழி எண்ணியிருந்தாள். நாளாக ஆக, தன் பதியினுடைய மனத்தில் இந்த எண்ணம் மிக்க



வேதனையை அளித்து வந்தது என்று தெரிந்து கொண்டாள். அதைப் போக்குவதற்காக அவள் எவ்வளவோ பிரயத்தனம் செய்தும் முடியவில்லை. விக்கிரமன் பிறந்ததிலிருந்து மகா ராஜாவின் அந்தரங்க வேதனை அதிக மாகியே வந்ததாகத் தெரிந்தது. ஒரு சமயம் அவர், ''உன் வயிற்றில் பிறந்த பிள்ளை ஒரு பெரிய சாம்ராஜ்யத்துக்குச் சக்கரவர்த்தியாயிருக்க வேண்டியவன். என்னால் அல்லவா இன்னொருவருக்குக் கப்பம் கட்டும் சிற்றரசு அவனுக்கு லபிக் கிறது!'' என்பார். இன்னொரு சமயம், ''அருள்மொழி ! உன் பிள்ளைக்கு என் னால் சாம்ராஜ்யப் பட்டாபிஷேகம் செய்து வைக்க முடியாது. ஆனால், வீரத் தந்தையின் புதல்வன் என்ற பட் டத்தை நிச்சயம் அளிப்பேன்!'' என் பார்.

அவருடைய வாக்கை நிறைவேற்றும் சமயம் இப்போது வந்து விட்டது. பழைய காலத்து வீர பத்தினிகளைப் போல் அவருடன் தானும் உயிர் விடு கிறதாயிருந்தால் பாதகமில்லை. அந்தப் பாக்கியத்தையும் தனக்கு அளிக்க மறுக் கிறாரே ? தான் வீரத் தாயாக இருந்து விக்கிரமனை வீர மகனாக வளர்க்க வேணு மாமே? ஐயோ! அவரைப் பிரிந்த பிறகு உயிரைத்தான் தாங்க முடியுமா?...

இப்படி எண்ணியபோது அருள் மொழிக்கு நெஞ்சு பிளந்துவிடும்போல் இருந்தது. திடீரென்று அழுகை பீறிக் கொண்டு வந்தது. ''ஓ!'' என்று கதறி விட்டாள்.

''அருள்மொழி! உன்னை வீரபத்தினி என்றல்லவா நினைத்தேன்? இவ்வளவு கோழையா நீ?'' என்று கடினமான குரலில் கூறிய வார்த்தைகளைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த் தாள். பார்த்திப மகாராஜா அங்கு நின்றார். உடனே, அவளுடைய அழுகை நின்றது; கண்ணீரும் வறண்டுவிட்டது.

''வா ! அரண்மனைக்குப் போகலாம்! அழுவதற்கும் சமாதானப்படுத்துவதற் கும் இப்போது நேரமில்லை'' என்றார் மகாராஜா.

இருவரும் கைகோத்துக் கொண்டு வாய் பேசாமல் அரண்மனைக்குள் போனார்கள்.

பார்த்திபனும் அருள்மொழியும் அரண்மனைக்குள் பிரவேசித்து, பூஜாக் கிரகத்துக்கு வந்தபோது தீபாராதனை நடக்கும் சமயமாயிருந்தது. பூஜாக் கிரகத்தில் சிவலிங்கம் பிரதிஷ்டை செய் யப்பட்டிருந்தது. இடது பக்கத்தில் பார்வதி தேவியின் அற்புதச் சிலை ஒன்று இருந்தது. தேவியின் இரு புறத்திலும் விநாயகரும் முருகக் கடவுளும் வீற் றிருந்தார்கள். இன்னொரு பக்கத்தில் ஸ்ரீதேவி பூதேவி சமேதரான மகா விஷ்ணு தரிசனம் தந்தார். எல்லா விக்கிரகங்களும் சண்பகம், பன்னீர், பாரிஜாதம் முதலிய மலர்களால் அலங் கரிக்கப்பட்டிருந்தன.

தெய்வ சந்நிதியில் இளவரசன் விக்கிர மன், கை கூப்பியவண்ணம் நின்று ஆரா தனையைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

அர்ச்சகர் தீபாராதனை செய்து மூவ ருக்கும் பிரஸாதம் கொடுத்துவிட்டு வெளியே சென்றார். விக்கிரமன் மகா ராஜாவைப் பார்த்து, ''அப்பா! சித்திர மண்டபத்துக்குப் போகலாம் என் றீர்களே?'' என்று கேட்டான். ''இதோ நான் வருகிறேன். விக்கிரமா! நீ முன் னால் போ!'' என்றார் மகாராஜா.

விக்கிரமன் வெளியே சென்றதும், மகாவிஷ்ணுவின் பாதத்தின் அடியில் வைத்திருந்த நீள வாட்டான மரப் பெட்டியை மகாராஜா சுட்டிக்காட்டிச் சொன்னார் : ''தேவி ! இந்தப் பெட் டிக்குள்ளே என்ன இருக்கிறது என்று என்னை நீ பல தடவை கேட்டிருக்கிறாய். நானும் 'காலம் வரும்போது சொல்லு கிறேன்!' என்று சொல்லி வந்திருக் கிறேன். சொல்ல வேண்டிய காலம் இப்போது வந்துவிட்டது. சோழ வம் சத்தின் புராதன பொக்கிஷம் இந்தப் பெட்டிக்குள்ளே இருக்கிறது. இதோ திறந்து காட்டுகிறேன், பார்!''

இவ்விதம் சொல்லிக் கொண்டே மகாராஜா அந்த மரப் பெட்டியைத் திறந்தார். பெட்டிக்குள்ளே பளபள வென்று ஜொலித்த ஓர் உடைவாளும், ஓர் ஓலைச் சுவடியும் காணப்பட்டன. உடை வாளின் பிடி தங்கத்தினாலானது; இரத்தினங்கள் இழைத்தது. வாளும் எண்ணெய் பூசிக் கூர்மையாய்த் தீட்டி வைத்திருந்தது. ஆகவே, பிடியும் வாளும் ஒன்றோடொன்று போட்டியிட்டு ஒளி வீசின. இதற்கு மாறாக, ஓலைச்சுவடியோ மிகப் பழைமையான தாய்க் கருநிறமாக இருந்தது.

பார்த்திபன் சொன்னார்: ''தேவி ! இந்த உடைவாள் சோழ வம்சத்திலே முற்காலத்தில் பிரசித்தி பெற்றிருந்த சக் கரவர்த்திகளின் காலத்திலிருந்து வந் தது. கரிகால் வளவனும் நெடுமுடிக் கிள்ளியும் இந்த உடை வாளைத் தரித்து உலகத்தை ஆண்டார்கள். ஓலைச் சுவடி யில் உள்ளது நமது தமிழகத்தின் தெய்வப் புலவர் அருளிய திருக்குறள். இந்த உடை வாளும், குறள் நூலும் தான் சோழர் குலத்தின் புராதன பொக்கிஷங்கள். இவற்றை நீ வைத்துக் காப்பாற்றி விக்கிரமனுக்கு வயது வரும் போது அவனிடம் சேர்ப்பிக்க வேண்

டும். அருள்மொழி ! இந்தப் புராதன உடைவாளை என் தகப்பனார் அணிந் திருந்தார் ; ஆனால் நான் அணியவில்லை. கப்பம் கட்டும் சிற்றரசனாயிருந்து கொண்டு கரிகால் வளவனும் நெடுமுடிக் கிள்ளியும் அணிந்த உடைவாளை அணிய நான் விரும்பவில்லை. விக்கிரமனிடம் நீ இதையும் சொல்ல வேண்டும். எப் போது அவன் ஒரு சின்னஞ்சிறு பிர தேசத்துக்காவது சுதந்திர மன்னனா கிறானோ, அப்போதுதான் இந்த உடை வாளைத் தரிக்கலாம் என்று கூற வேண் டும். அந்தக் காலத்தில் இந்த உடை வாளைத் தரித்து, இந்தத் தெய்வத் திருக் குறளில் சொல்லியிருக்கும் வண்ணம் இராஜ்யபாரம் செய்யும்படியும் கூற வேண்டும். இந்தப் பொறுப்பை உன் னிடம் ஒப்புவிக்கிறேன் அருள்மொழி ! இதை நிறைவேற்றுவதாகத் தெய்வ சந்நிதானத்தில் எனக்கு வாக்குறுதி அளிக்க வேண்டும். விக்கிரமனை வீர மகனாக நீ வளர்க்க வேண்டும்.''

இதைக் கேட்ட அருள்மொழித் தேவி கண்களில் நீர் ததும்ப, விம்முகின்ற குரலில், '' அப்படியே செய்கிறேன், மகாராஜா !'' என்றாள். பார்த்திபன் அப்போது, ''பகவான் அதற்கு வேண் டிய தைரியத்தை உனக்கு அளிக்கட் டும் !'' என்று சொல்லி, அருள்மொழி யைத் தழுவிக் கொண்டு, அவளுடைய கண்களில் பெருகிய கண்ணீரைத் தம் முடைய மேலாடையால் துடைத்தார்.

## அத்தியாயம் 8

# சித்திர மண்டபம்

**உ**றையூர்த் தெற்கு ராஜ வீதியி லிருந்த சித்திர மண்டபம் அந்தக் காலத் தில் தென்னாடெங்கும் புகழ் வாய்ந் திருந்தது. காஞ்சியில் உள்ள மகேந்திர சக்கரவர்த்தியின் பேர் பெற்ற சித்திர மண்டபம்கூட உறையூர்ச் சித்திரமண்ட பத்துக்கு நிகராகாது என்று ஜனங்கள் பேசுவது சகஜமாயிருந்தது. பார்த்திப மகாராஜாவும் இளவரசன் விக்கிரமனும் வெண் புரவிகளின் மீதேறி இந்தச் சித்திர மண்டபத்தின் வாசலை அடைந்த அதே சமயத்தில், அங்கே படகோட்டி பொன்னனும் வந்து சேர்ந்தான். இந்த அகால வேளையில் மகாராஜா வைப் பார்க்க முடியுமோ என்னமோ என்ற கவலையுடன் வந்த பொன்னன் திடீரென்று மகாராஜாவைப் பார்த்த தும், இன்னது சொல்வது என்று தெரி யாமல் திகைத்தான். ''மகாராஜா!'' என்னும் போதே அவனுக்கு நாக்குழறி யது. அந்தக் குழறிய குரலைக் கேட்டு மகாராஜாவும் இளவரசனும் அவனைத் திரும்பிப் பார்த்தார்கள். ''பொன்னா! நீ எங்கே வந்தாய் ?'' என்றார் மகா ராஜா. பொன்னனின் மௌனத்தைக் கண்டு ஒருவாறு அவன் வந்த கார ணத்தை ஊகித்தவராய், குதிரை மீதிருந்து கீழிறங்கினார். இளவரசன் விக்கிரமனும் லாகவமாய்க் குதிரை மீது இருந்து குதித்தான். ''பொன்னா ! இந்தத் தீவர்த்தியை வாங்கிக் கொள்!'' என்றார் மகாராஜா. அருகே தீவர்த்தி யைத் துக் கொண்டு நின்ற ஏவ லாளனிடமிருந்து பொன்னன் தீவர்த் தியை வாங்கிக் கொண்டான். அந்த வேளையில் மகாராஜா எதற்காகச் சித்திர மண்டபத்துக்கு வந்திருக்கிறார், எதற்காகத் தன்னைத் தீவர்த்தியுடன் பின்தொடரச் சொல்லுகிறார் என்ப தொன்றும் அவனுக்குப் புரியா விட்டாலும், மகாராஜா தன்னைத் திரும்பிப் போகச் சொல்லாமல் தம் முடன் வரும்படி சொன்னதில் அள விலாத குதூகலம் உண்டாயிற்று. மகா ராஜாவும் இளவரசரும் முன் செல்ல, பொன்னன் தீவர்த்தியைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு சித்திர மண்டபத் துக்குள் புகுந்தான்.

அந்தச் சித்திர மண்டபத்துக்குள் முதன் முதலாகப் பிரவேசிக்கிறவர் களுக்கு, 'நமக்குள்ள இரு கண்கள் போதாது;இரண்டாயிரம் கண்கள் இருந் தால்தான் இங்கேயுள்ள சித்திரங்களை ஒருவாறு பார்த்துத் திருப்தி அடைய லாம்' என்று தோன்றும். அந்த விஸ்தாரமான மண்டபத்தின் விசால மான சுவர்களில் விதம்விதமான வர் ணங்களில் பல வகைச் சித்திரங்கள் தீட்டப் பெற்றிருந்தன. அந்த மண்ட பத்தைத் தாங்கிய சிற்ப வேலைப்பாடு உள்ள தூண்களிலும் சித்திரங்கள் காணப்பட்டன. மேல் விமானத்தின் உட்புறங்களையும் சித்திரங்கள் அலங் கரித்தன. ஒரு சுவரில் ததீசி முனிவ ரிடம் இந்திரன் வஜ்ராயுதத்தைப் பெறு வது, இந்திரன் விருத்திராசுரனைச் சம் ஹரிப்பது, பிறகு இந்திரலோகம் வரு வது, தேவர்களும் தேவ மாதர்களும் இந்திரனை எதிர்கொண்டு வரவேற் பது, இந்திரனுடைய சபையில் தேவ மாதர்கள் நடனம் புரிவது முதலிய காட்சிகளைச் சித்திரித்திருந்தது. இன்

# வசந்த மலர் மேனி
# கோகுல் 'ஸாண்டல்வுட்

கோகுல் மங்கை,
மணம் கவர் நங்கை.
அவள்
தனிக் கவர்ச்சியை
நீங்களும் பெற
கோகுல் ஸாண்டல்வுட்
டாய்லெட் பவுடரை
உபயோகியுங்கள்
தூய சந்தனம்,
வெளி நாட்டு வாசனைத்
திரவியங்கள், பலவித
இயற்கை மூலிகைகள் கலந்த
பிரத்யேக 'மைக்ரோ-பைன்'
முறையில் தயாரிக்கப்படுவது
கோகுல் ஸாண்டல்வுட்
டாய்லெட் பவுடர்.

**கோகுல்**

**ஸாண்டல்வுட்**
**டாய்லெட் பவுடர்**

டி.எஸ்.ஆர் & கம்பெனி,
மதராஸ்
பிரத்யேக தயாரிப்பு




டி.எஸ்.ஆர் & கம்பெனி, மதராஸ்
ராமாபுரம், மதராஸ்-600 089

ADWAVE/TSR/449A

ஒரு பக்கத்தில், திருப்பாற்கடலில் மந்தரகிரியை மத்தாகவும் வாஸுகியைக் கயிறாகவும் கொண்டு தேவர்கள் ஒரு பக்கமும் அசுரர்கள் ஒரு பக்கமும் நின்று கடையும் பிரம்மாண்டமான காட்சியைச் சித்திரித்திருந்தது. அடுத்தாற்போல், பரமசிவனுடைய தவத்தைக் கலைப்பதற்குக் காமதேவன் மலர்க்கணை தொடுப்பது முதல், குமரப்பெருமான் ஜனனம் வரையிலும் உள்ள காட்சிகள் காணப்பட்டன. இந்த உருவங்கள் எல்லாம் கேவலம் உயிரற்ற சித்திரங்களாகத் தோன்றவில்லை. கால், கை, முகம் இவற்றின் சரியான அளவு எடுத்துச் சாமுத்திரிகா லட்சணத்துக்கு இணங்க எழுதப்பட்டிருக்கவும் இல்லை. ஆனாலும், அந்த உருவங்களின் ஒவ்வோர் அவயவத்திலும் காணப்பட்ட தெளிவும், முகத்தில் பொலிந்த பாவமும், தத்ரூபமாய் அந்தத் தேவர்களின் முன்னால் நாம் நிற்கிறோமென்னும் மயக்கத்தை உண்டாக்கின.

பிரதி மாதமும் மூன்று தினங்கள் இந்தச் சித்திர மண்டபம் பிரஜைகள் எல்லோரும் பார்ப்பதற்கென்று திறந்து வைக்கப்படுவதுண்டு. அவ்வாறு திறந்திருந்த நாட்களில் பொன்னன் இரண்டு மூன்று தடவை இந்தச் சித்திரங்களைப் பார்த்து மகிழ்ந்திருக்கிறான். இப்போதும் அந்தச் சித்திரங்கள் அவனுடைய கண்ணையும் கருத்தையும் கவரத்தான் செய்தன. ஆனாலும், இன்று அவற்றை நின்று பார்க்க முடியாதபடி மகாராஜாவும் இளவரசரும் முன்னால் விரைந்து போய்க் கொண்டிருந்தபடியால், பொன்னனும் அவர்களைப் பின்தொடர்ந்து விரைந்து சென்றான்.

சித்திர மண்டபத்தின் இரண்டு மூன்று கட்டுக்களையும் தாண்டிச் சென்று கடைசியாகப் பூட்டிய கதவையுடைய ஒரு வாசற்படியண்டை மகாராஜா நின்றார். முன்னொரு தடவை பொன்னன் இதே இடத்தில் நின்று, இந்த வாசற்படிக்கு உட்புறத்தில் என்ன இருக்குமோ என்று யோசித்திருக்கிறான். இந்தக் கதவைத் திறக்கக் கூடாதென்பது மகாராஜாவின் கட்டளை என்று காவலாளர்கள் அப்போது தெரிவித்ததுண்டு. மகாராஜா இப்போது அந்தக் கதவண்டை வந்து நின்று, தம் கையிலிருந்த சாவியினால் பூட்டைத் திறக்கத் தொடங்கியதும் பொன்னனுடைய ஆவல் அளவுகடந்ததாயிற்று. 'இதனுள்ளே ஏதோ பெரிய அதிசயம் இருக்கிறது. அதை நாம் இப்போது பார்க்கப் போகிறோம்' என்று எண்ணியபோது அவனுடைய நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது.

கதவு திறந்ததும், ''பொன்னா! நீ முதலில் உள்ளே போ! தீவர்த்தியை நன்றாய்த் தூக்கிப் பிடி! சுவருக்கு ரொம்பச் சமீபமாய்க் கொண்டு போகாதே! தீவர்த்திப் புகையினால் சித்திரங்கள் கெட்டுப்போகும்'' என்றார் மகாராஜா.

பொன்னன் உள்ளே போய்த் தீவர்த்தியைத் தூக்கிப் பிடித்தான். அங்கிருந்த சுவர்களிலும் சித்திரங்கள்தாம் தீட்டியிருந்தன. ஆனால் அவை என்ன சித்திரங்கள், எதைக் குறிப்பிடுகின்றன என்பது அவனுக்குத் தெரியவில்லை.

பொன்னனுக்குப் பின்னால், விக்கிரமனுடைய கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு பார்த்திப மகாராஜா அந்த இருள் சூழ்ந்த மண்டபத்துக்குள்ளே புகுந்தார்.

''குழந்தாய்! பூட்டி வைத்திருக்கும் இந்த மண்டபத்துக்குள்ளே என்ன இருக்கிறது என்று பலதடவை என்னைக் கேட்டிருக்கிறாயே! உனக்கு இன்னும் கொஞ்சம் வயதான பிறகு இந்தச் சித்திரங்களைக் காட்ட வேணுமென்றிருந்தேன். ஆனால் இப்போதே காட்ட வேண்டிய அவசியம் நேர்ந்திருக்கிறது. விக்கிரமா! இந்த மண்டபத்தை நான் வேணுமென்றே இருள் அடைந்ததாய் வைத்திருந்தேன். இதற்குள்ளே என்னைத் தவிர வேறு யாரும் வந்ததில்லை. யாரும் இந்தச் சுவரிலுள்ள சித்திரங்களைப் பார்த்ததுமில்லை.... பொன்னா! தீவர்த்தியைத் தூக்கிப் பிடி!'' என்றார் மகாராஜா.

அவருடைய பேச்சில் கவனமாக இருந்த பொன்னன் சட்டென்று தீவர்த்தியைத் தூக்கிப் பிடித்தான்.

''அதோ அந்த முதல் சித்திரத்தைப் பார், குழந்தாய்! அதில் என்ன தெரிகிறது?'' என்று மகாராஜா கேட்டார்.

''யுத்தத்துக்குப் படை கிளம்புகிறது. ஆஹா! எவ்வளவு பெரிய சைனியம்! எவ்வளவு யானைகள்; எவ்வளவு தேர்கள்; குதிரைகள், காலாட் படைகள்!'' என்று விக்கிரமன் வியப்புடன் கூறினான்.

பிறகு சட்டென்று திரும்பி, தந்தையின் முகத்தைப் பார்த்து ''அப்பா!...'' என்று தயங்கினான்.

''என்ன விக்கிரமா! கேள்'' என்றார் மகாராஜா.

''ஒன்றுமில்லை அப்பா! இந்தச் சித்திரங்கள் யார் எழுதினவை என்று யோசித்தேன்'' என்றான் விக்கிரமன்.

''நீ நினைத்தது சரிதான், குழந்தாய்! என் கையினால் நானே எழுதிய சித்திரங்கள்தாம் இவை. இந்தப் பன்

னிரண்டு வருஷ காலமாய் இரவிலும் பகலிலும், தூங்கும்போதும், விழித்திருக்கும்போதும் நான் கண்டு வந்த கனவுகளைத்தான் இங்கே எழுதியிருக்கிறேன். குழந்தாய், நன்றாய்ப் பார்! யாருடைய சைனியங்கள் இவை, தெரிகிறதா?''

''ஆகா! தெரிகிறது. முன்னால் புலிக்கொடி போகிறதல்லவா? சோழ ராஜ்யத்தின் படைதான் இவை. ஆனால் அப்பா!....'' என்று மறுபடியும் தயங்கினான் விக்கிரமன்.

''என்ன கேட்க வேணுமோ, கேள் விக்கிரமா!''

''அவ்வளவு கம்பீரமாக நடந்து போகும் அந்தப் பட்டத்து யானையின் மேல், யானைப் பாகன் மட்டும்தானே இருக்கிறான்? அம்பாரியில் யாரும் இல்லையே, அப்பா!''

''நல்ல கேள்வி கேட்டாய்! வேண்டுமென்றேதான் அப்படி யானையின் மேல் யாரும் இல்லாமல் விட்டிருக்கிறேன். இந்தச் சோழ வம்சத்தில் எந்தத் தீரன் இம்மாதிரி பெரிய சைனியத்தைத் திரட்டிக்கொண்டு திக்விஜயம் செய்வதற்காகக் கிளம்பிப் போகிறானோ, அவனுடைய உருவத்தை அந்த யானையின் மேல் எழுத வேணும் குழந்தாய்! தற்சமயம் இந்தச் சோழ ராஜ்யம் ஒரு கையகலமுள்ள சிற்றரசாயிருக்கிறது. வடக்கே பல்லவர்களும், தெற்கே பாண்டியர்களும், மேற்கே சேரர்களும் இந்தச் சோழ நாட்டை நெருக்கிச் சிறைப்படுத்தியிருக்கிறார்கள். ஆனால் இந்த நாடு எப்போதும் இப்படி இருந்ததில்லை. ஒரு காலத்தில் நம்முடைய வம்சம் மிக்க புகழ் வாய்ந்திருந்தது, விக்கிரமா! உன்னுடைய மூதாதையர்களிலே கரிகால் வளவன், நெடுமுடிக் கிள்ளி முதலிய மகாவீரர்கள் இருந்திருக்கிறார்கள். சோழர் என்ற பெயரைக் கேட்டதும் மாற்றரசர்கள் நடுங்கும்படியாக அவர்கள் வீரச் செயல்கள் புரிந்திருக்கிறார்கள். அப்போது பல்லவர் என்ற பெயரே இந்தத் தென்னாட்டில் இருந்ததில்லை. சோழ சாம்ராஜ்யம் வடக்கே வெகுதூரம் பரவியிருந்தது. அந்நாளில் பாண்டியர்களும் சேரர்களும் சோழ மன்னர்களுக்குத் திறை செலுத்திக் கொண்டிருந்தார்கள். கடல்களுக்கு அப்பால் எத்தனையோ தூரத்திலுள்ள அரசர்கள் எல்லாம் சோழ சக்கரவர்த்திகளுக்குக் காணிக்கைகளுடன், தூதர்களை அனுப்பி வந்தார்கள். இப்போது கடல் மல்லைத் துறைமுகம் பிரசித்தி பெற்றிருப்பது போல் அந்த நாளில் காவேரிப் பட்டினம் பெரிய துறைமுகமாயிருந்தது. காவேரிப்பட்டினத்திலிருந்து பெரிய கப்பல்கள் கிளம்பித் தூர தூர தேசங்களுக்கெல்லாம் சென்று பொன்னும் மணியும் கொண்டு வந்து சோழ மன்னர்களின் பொக்கிஷத்தை நிரப்பி வந்தன. குழந்தாய்! மறுபடியும் இந்தச் சோழ நாடு அம்மாதிரியான மகோன்னத நிலையை அடைய வேண்டும் என்பது என் உள்ளத்தில் பொங்கும் ஆசை. நான் இரவிலும் பகலிலும் காணும் கனவு! அதோ அந்தச் சித்திரத்தைப் பார்!''

இவ்விதம் மகாராஜா ஆவேசம் கொண்டவர் போல் பேசிக் கொண்டு மேலும் மேலும் சித்திரங்களைக் காட்டிக் கொண்டே போனார். அடுத்த சித்திரத்தில் சோழ சைனியம் ஒரு பெரிய நதியைக் கடக்கும் காட்சி காணப்பட்டது. பிறகு அப்படைகள் ஒரு பெரிய மலையில் ஏறிச் சென்றன. அப்பால் ஒரு பெரிய யுத்தக் காட்சி காணப்பட்டது. அதிலே சோழர் சைன்யம் வெற்றியடைந்த பிறகு, மாற்றரசர்கள் காணிக்கைகளுடன் வந்து சரணாகதி செய்தார்கள்.

இம்மாதிரிப் பல நதிகளைத் தாண்டியும், பல மலைகளைக் கடந்தும், பல மன்னர்களை வென்றும், கடைசியில் சோழ சைனியம் இமய மலையை அடைகிறது. பர்வத ராஜாவான இமயத்தின் உச்சியில் சோழர்களின் புலிக்கொடி நாட்டப் படுகிறது. அதற்குப் பிறகு சோழ நாட்டின் தலைநகருக்குச் சைனியம் திரும்பி வருவதும் நகர மாந்தர் அந்த வீரப் படையை எதிர்கொண்டு அழைப்பதுமான கோலாகலக் காட்சிகள்.

இன்னொரு பக்கத்தில் புலிக்கொடி பறக்கும் பெரிய பெரிய கப்பல்கள் துறைமுகங்களிலிருந்து கிளம்பும் காட்சியை அற்புதமாகச் சித்திரித்திருந்தது. அந்தக் கப்பல்கள் தூர தூர தேசத்துக்குப் போய்ச் சேருகின்றன. அந்தந்தத் தேசங்களின் மன்னர்கள் பரிவாரங்களுடன் எதிர் கொண்டு வந்து சோழ நாட்டின் தூதர்களை உபசரிக்கிறார்கள். கடல் சூழ்ந்த அந்த நாடுகளில் சோழர்களின் புலிக் கொடி கம்பீரமாகப் பறக்கிறது. புலிக்கொடி பறக்கும் தேசங்களிலெல்லாம் பெரிய பெரிய கோயில்களும், கோபுரங்களும் வானை அளாவி எழுகின்றன. இத்தகைய அற்புதமான சித்திரங்களே அந்த மண்டபம் முழுவதும் நிறைந்திருந்தன.

(தொடரும்)

# ஜான்ஸன்ஸ் வழங்குகிறார்கள்
# பல-பயனுள்ள cotton bud



## இதோ அதன் உபயோகங்கள்



மேக்-அப்பை சீராக்குகிறது அல்லது களைக்க உதவுகிறது.



நுட்பமான ஹை-ஃபை சாதனங்களை சுத்தம் செய்கிறது.



குழந்தையின் மூக்கை சுத்தம் செய்கிறது—நன்கு, மென்மையாக.



சிறிய காயங்களின் மீது மருந்தை ஒத்தி எடுக்க உதவுகிறது.



காதுகளை பத்திரமாக சுத்தம் செய்கிறது-குழந்தையின் காது-களையும் உங்கள் காதுகளையும்.

ஜான்ஸன்ஸ் Cotton Bud-ஐ இன்னும் எத்தனையோ வழிகளில் நாள்தோறும் உபயோகிக்கலாம். உங்கள் வீட்டில் எப்பொழுதும் ஜான்ஸன்ஸ் Cotton Bud இருக்கட்டும்.

**அது சுத்தமானது • பத்திரமானது.**
**சுகாதாரமானது • சௌகரியமானது.**




புதிது !
வளையக்கூடிய
பிளாஸ்டிக் தண்டு

**பத்திரமாக சுத்தம்**
**செய்வீர்- ஜான்ஸன்ஸ்**
**Cotton Bud—ஆல் சுத்தம் செய்வீர்**

"டைம் ஆச்சு வேகமா குடும்மா !"

"சீக்கிரம் வாங்குங்க சார் !"

ஜாக்பாட் பந்தயம் ஆரம்பிக்க இன்னும் சில நிமிடங்களே இருந்தன. போன ஞாயிற்றுக் கிழமை, ஜாக்பாட் தொகை 'காரீட் ஓவர்' ஆகிவிட்டது. அதனால்தான் இந்தச் சனிக்கிழமை இவ்வளவு கூட்டம்.



# சுமை இறங்கியது!



சாம்பசிவம் முகத்திலும் கழுத்திலும் வழிந்த வியர்வையைத் துண்டினால் துடைத்துக் கொண்டார். அவருக்கு முன்னால் ஐந்தாறு பேர் இருந்தார்கள். நம்பர்கள் எழுதப்பட்ட துண்டுக் காகிதத்தை ஒரு முறை பார்த்துக் கொண்டார். எதற்கும் 'க்யூ'வில் நிற்க விரும்பாதவர் சாம்பசிவம். 'எவன் வெய்யிலில் க்யூவில் நிற்பான்?' என்று ரேஷன் சர்க்கரையை விட்டு விட்டு ஏகப்பட்ட விலை கொடுத்து வெளியில் வாங்குவார். ஆனால் இப்பொழுது பக்கத்து 'க்யூ'வில் நின்றிருந்த பரட்டைத் தலை விட்ட பீடிப் புகை நாற்றத்தைச் சகித்துக் கொண்டு, முன்னால் நின்றிருந்த கிழவரின் அழுக்குச் சட்டை மேலே உரசும் அருவருப்பைச் சகித்துக் கொண்டு கொளுத்தும் வெய்யிலில் நீண்ட க்யூவில் நிற்கிறார்.

ஆசை.

சூரியன் முதுகுப் பக்கம் தாக்கிப் பொசுக்கிக் கொண்டிருந்தான். ஆனால் அந்த சூரியனால்கூட அவர்களுடைய ஆசையைப் பொசுக்க முடியவில்லை.

இரண்டு டிக்கெட்டுக்களை வாங்கிக் கொண்டு நகர்ந்தார் சாம்பசிவம். கையிலிருந்த சீட்டுடன் ஒப்பிட்டுப் பார்த்தார். சரியாக இருந்தது. 2-2-4-3-8, 2-2-6-3-8. டிக்கெட்டுக்களைப் பத்திரமாக மேல் பாக்கெட்டில் போட்டுக் கொண்டு நகர்வதற்கும் ஒலிபெருக்கியில் 'பஸ்ஸர்' ஒலி கேட்பதற்கும் சரியாக இருந்தது. பந்தயம் ஆரம்பிப்பதற்காகக் குதிரைகள் வரிசையாக நிறுத்தப்படுகின்றன என்று பொருள். ஜாக்பாட் ஜன்னல்கள் 'பட், பட்' என்று மூடப்பட்டன. டிக்கெட் வாங்க முடியாதவர்கள் ஏமாற்றத்துடன் திரும்பினார்கள். அவசரம் அவசரமாக மைதானத்தின் பக்கம் போன சாம்பசிவம் ஒரு பெஞ்சில் ஏறி நின்று கொண்டார்.

'தி ஸ்டார்ட்டர்ஸ் ஆர்டர்ஸ்...அண்ட் தே ஆர் ஆஃப்'--நேர்முக வர்ணனையாளரின் குரல் சரளமாக ஒலித்தது. குதிரைகளின் ஓட்டம் மிக அழகாக ஆங்கிலத்தில் விவரிக்கப்பட்டது.

சாம்பசிவம் தேர்ந்தெடுத்திருந்த இரண்டாம் எண் குதிரை மிகச் சுலபமாக வெற்றி பெற்றுவிட்டது. அவருடைய இரண்டு டிக்கெட்களிலும் ஒரு 'லெக்' பாஸ் ஆகிவிட்டது. மனத்தில் ஒரு சந்தோஷம் ஏற்பட்டது.



அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி:




கீழே இறங்கித் தண்ணீர் குடிக்கக் குழாய்ப் பக்கம் போனார். அடுத்த பந்தயம் ஆரம்பிக்க இன்னும் அரை மணி நேரம் இருக்கிறது.

சாம்பசிவம் பரம்பரைச் சூதாடி அல்ல. அவருடைய நாற்பத்தைந்து வயதில், கிண்டிக்கு வருவது இது நாலாவது தடவை.

போன மாதம் ஒரு நாள் மாலையில் ரங்கநாதன் தெருவில் கறிகாய் வாங்கிக் கொண்டிருந்தபோது யாரோ முதுகில் தட்டினார்கள். நிமிர்ந்து பார்த்தபோது வெங்கடேசன் நின்றிருந்தார். சாம்பசிவத்தின் பால்ய நண்பர். இருவரும் காப்பி குடித்தார்கள். பேச்சுவாக்கில், "இந்த வாரம் 'ட்ரெபின்'ல் ஒரு 'லெக்' மிஸ் ஆகிவிட்டது. இல்லாவிட்டால் இரண்டாயிரம் ரூபாய் கிடைத்திருக்கும்" என்றார்.

"அதென்னது 'ட்ரெபின்'?" என்று புரியாமல் கேட்டார் சாம்பசிவம்.

"இதுகூடத் தெரியாமல் இருக்கிறீரே!" அந்தக் கணத்திலேயே அசுவ சாஸ்திர அட்சராப்பியாசம் ஆரம்பமாகி விட்டது. "மூன்று பந்தயங்களில் முதலாவதாக வரும் குதிரைகளைச் சரியாகக் குறிப்பிடுவது ட்ரெபின். அதே போல் ஐந்து பந்தயங்களில் குறிப்பிடுவது ஜாக்பாட்... நாளைக்கு என்னுடன் கிண்டிக்கு வாரும். எல்லாம் புரியும்."

ஜனமேஜயன்

"ரேஸாக்கா? சே, சே!" சாம்பசிவம் முகத்தைச் சுளித்தார்.

"களவும் கற்று மறக்க வேண்டும், ஓய். இதொன்றும் பெரிய பாவமில்லை. நான் பத்து வருஷங்களாகக் கிண்டிக்குப் போகிறேன். என் குடும்பமென்ன தெருவிலா நிற்கிறது?.... நாளைக்கு நானே உம் வீட்டுக்கு வந்து அழைச்சுண்டு போறேன். ..."

சாம்பசிவம் மறுத்தும் கேளாமல் வற்புறுத்தி மறு நாள் தம்மோடு அழைத்துக் கொண்டு போனார் வெங்கடேசன். தட்டிக் கேட்க யாரும் இல்லாவிட்டாலும் ஒரு தார்மிக பயம் இருந்தது சாம்பசிவத்துக்கு. மனத்தில் ஓர் உறுத்தல் இருந்தது. அவர் வளர்ந்து ஆளாக்கப்பட்ட சூழ்நிலை அப்படி. அவருடைய அப்பா பரமேசுவர அய்யர் விளையாட்டுக்காகக் கூடத் திண்ணையில் சீட்டுக் கச்சேரியில் கலந்து கொள்ளமாட்டார்.

அன்று கடைசிப் பந்தயத்தில் ஐந்து ரூபாயைச் சாம்பசிவத்தின் கையில் திணித்தார் வெங்கடேசன். "உம்முடைய கைராசி எப்படியிருக்கிறது, பார்க்கலாம். ஒரு 'போர் காஸ்ட்' டிக்கெட் வாங்கி வாரும். 5—7 என்று."

அந்தப் பந்தயத்தில் 5-ம், 7ம் முதலாவது இரண்டாவதாக வந்தன. 'போர்காஸ்ட்' பாஸ். வெங்கடேசனுக்குப் பிடிபடாத மகிழ்ச்சி. "நீர் ரொம்ப அதிர்ஷ்டக்காரர் ஓய். முதல் டிக்கெட்டே பழுத்துவிட்டதே. ஜாக்பாட்கூட அடித்துவிடுவீர் போலிருக்கிறதே!" என்று புகழ்ந்து தள்ளினார். சாம்பசிவத்துக்கு ஒருவித சந்தோஷம் ஏற்பட்டது.

அடுத்த வாரம் வெங்கடேசன் வற்புறுத்தாமலே கிளம்பினார் சாம்பசிவம். அன்று

அடுத்த இதழில்

போட்டிக் கதை: நியதி
எஸ். லட்சுமிசுப்பிரமணியம்

நகர் வலம்: ஹெளரா
ரா. வீழிநாதன்

# ஹை (ரே)ஜாக்கிங்! "தராஜா"

'டபுள்' பந்தயத்தில் இருநூறு ரூபாய் கிடைத்தது. அதற்கு அடுத்த வாரம் வெங்கடேசன் வருவதற்கு முன்னரே புறப்பட்டுத் தயாராக நின்றார் சாம்பசிவம்.

இப்பொழுது அவருக்கு ரேஸில் ஒரு பிடிப்பு ஏற்பட்டிருந்தது. ஜாக்கி, எடை, டிரெய்னர் என்று சில விஷயங்களைத் தெரிந்து கொண்டிருந்தார்.

இந்த வாரம் வெங்கடேசனால் வர முடியவில்லை. மைத்துனர் பெண்ணுக்குக் கல்யாணம் என்று திருச்சிக்குப் போய்விட்டார். ஆனால் அதற்காகச் சாம்பசிவம் தயங்கவில்லை. ஒரு ரூபாய் கொடுத்து ரேஸ் புத்தகம் ஒன்று வாங்கிக் கொண்டு கிண்டிக்கு வந்துவிட்டார். ஏதோ தெரிந்த அளவு கணக்குப் போட்டு இரண்டு ஜாக்பாட் டிக்கெட்டுகள் வாங்கிவிட்டார். ஒரு 'லெக்' பாஸூம் ஆகிவிட்டது.

அன்றைய ஜாக்பாட் தொகை ரூபாய் மூன்று லட்சத்து இருபதாயிரத்து அறுநூற்று நாற்பது என்று போர்டு அறிவித்தது. முதல் 'லெக்'கில் பாஸான டிக்கெட்டுகளின் எண்ணிக்கை ஆறுயிரத்து நூற்றிருபது என்றும் அறிவிக்கப்பட்டது.

அடுத்த பந்தயம் ஆரம்பமாயிற்று. சாம்பசிவத்தின் துடிப்பும் அதிகமாயிற்று. அவர் கட்டியிருந்த பஞ்சவர்ணம் முதலில் நாலாவது இடத்தில்தான் இருந்தது. ஆனால் கடைசி வளைவைத் தாண்டியதும் வேகமாகப் பாய்ந்து சுலபமாக ஜெயித்துவிட்டது. சாம்பசிவம் நிம்மதிப் பெருமூச்சுவிட்டார். இரண்டு டிக்கெட்களிலும் அவருக்கு இரண்டு 'லெக்' பாஸ்.

டெலிவிஷன் பக்கம் வந்தார். கூட்டமாக இருந்தது. எட்டணா கொடுத்து — வெளியே நாலணா பெறாத — ஓர் ஆரஞ்சுப் பழத்தை வாங்கி உரித்தார். இன்னும் மூன்று 'லெக்' பாஸ் ஆக வேண்டும். ஆகிவிட்டால்.... ஆகுமா ?

சிறிது நேரத்தில் ஜாக்பாட் இரண்டு பந்தயங்களிலும் வெற்றி பெற்ற டிக்கெட்டுக்களின் எண்ணிக்கையை மைக்கில் அறிவித்தார்கள்: 1576. அவற்றில் தம்முடையவை இரண்டு டிக்கெட் என்று நினைக்கச் சாம்பசிவத்துக்குப் பெருமையாக இருந்தது.

'அடுத்த பந்தயம் தனலா பந்தயம். உங்கள் டிக்கெட்டுக்களைச் சீக்கிரமாகப் பெற்றுக் கொள்ளுங்கள்' என்று இனிமையான மென் குரல் ஒலிபெருக்கியில் தவழ்ந்து வந்தது. சாம்பசிவம் ஒரு தனலா டிக்கெட் வாங்கிக் கொண்டு முதலில் நின்றிருந்த அதே இடத்துக்கு வந்தார். அங்கு நின்ற போதுதானே அவர் கட்டிய குதிரை ஜெயித்தது ?

''எடை பத்து கிலோ குறைஞ்சிருக்கு. ஜாக்கி சரன்சிங் ஒட்டறான். ட்ரா நம்பர் ஒண்ணு.... அதனால் எட்டுதான் துண்டா ஜெயிக்கும்.'' பக்கத்தில் நின்றிருந்த நீல ஸ்லாக் வாலிபன் தன் சகாக்களிடம் எட்டாம் நம்பர் நீலவேணி இன்னின்ன காரணங்களால் ஜெயிக்கும் என்று விளக்கிக் கொண்டிருந்தான். அவன் சொன்ன காரணங்கள் மிகப் பொருத்தமானவையாகப் பட்டன சாம்பசிவத்துக்கு. தெரியாத்தனமாக 8—ஐ விட்டு விட்டு 4—யும் 6—யும் வைத்துவிட்டோமே ஜாக்பாட் டிக்கெட்டில் என்று சஞ்சலப்பட ஆரம்பித்தார். அதற்குள் ரேஸ் ஆரம்பமாகி விட்டது.

நீலச் சட்டைக்காரன் உரத்த குரலில் கத்தினன். அவன் சொன்ன நீலவேணிதான் முன்னால் வந்து கொண்டிருந்தது. ஆனால் 'நேர்ப் பாதை'க்கு வந்தபோது நீலவேணியின் பாய்ச்சல் குறைந்துவிட்டது. ஆறும் நம்பர் 'மூன் ஹேரவன்' வெளிப் பக்கமாகப் பாய்ந்து வந்தது. கடைசி நூறு மீட்டர் தூரத்தில் நீலவேணி தொங்கிப் போய்விட்டது. 'மூன் ஹேரவன்' ஒரு 'லெந்த்' வித்தியாசத்தில் வெற்றி பெற்றுவிட்டது.

''ஆறு..'' என்று தம்மையும் அறியாமல் மகிழ்ச்சியில் கூவிவிட்டார் சாம்பசிவம். ஒரு டிக்கெட்டில் அவருக்கு மூன்று 'லெக்' பாஸ் ஆகிவிட்டது.

நீலச் சட்டைக்காரனைத் திரும்பப் பார்த்தார். இப்பொழுது அவன் அதே உரத்த குரலில் நீலவேணி ஏன் ஜெயிக்கவில்லை என்பதற்கான காரணங்களைக் கூறிக் கொண்டிருந்தான்.

சாம்பசிவத்துக்கு இருப்புக் கொள்ளவில்லை. இன்னும் இரண்டே பந்தயங்கள். அவற்றிலும் தாம் குறிப்பிட்ட குதிரைகள் வெற்றி பெற்று விட்டால்... நிச்சயமாக ஒரு முப்பதாயிரமாவது கிடைக்கும். ஜானகியின் கல்யாணத்தை ஜாம் ஜாமென்று நடத்திவிடலாம். ஜானகி அவருடைய மூத்த பெண். பி. ஏ. முடித்துவிட்டு வீட்டில் இருக்கிறாள்.



பூனைக்குச் சிறகு முளைத்தால் உலகில் ஒரு குருவிக் கூட்டைக்கூட மீதி வைக்காது. அற்பனுக்குப் பதவியும் அதிகாரமும் கிடைத்தால் இறுமாப்புள்ளவனாக எளியோரைத் துன்புறுத்துவான்.

லா அதி: நன்றி: குமரிமலர்

அந்த பி. ஏ. பையனுக்கே முடித்துவிடலாம். யாருக்குத் தெரியும் நமக்குக் குதிரையின் கால்களில்தான் அதிர்ஷ்டம் இருக்கிறதோ, என்னவோ!

மாடிக்குச் சென்று சாம்பசிவம் காப்பி குடித்துவிட்டு வந்தபோது ஜாக்பாட் மூன்று பந்தயங்களிலும் வெற்றி பெற்ற டிக்கட்டு களின் எண்ணிக்கையை அறிவித்தார்கள்.. 103.

''ஜாக்பாட்டில் 3.... ஜாக்பாட்டில் 3...'' என்று ஒரிருவர் கத்திக் கொண்டிருந்தார்கள். அதன் பொருளை வெங்கடேசன் சொல்லிக் கொடுத்திருந்தார். அவர்களுடைய ஜாக் பாட் டிக்கட்டில் மூன்று லெக் பாஸ் ஆகி விட்டது. நாலாவது 'லெக்'கில் ஏதாவது நம்பர் வைத்திருப்பார்கள். இப்பொழுது மூன்று வந்துவிடுமோ என்ற பயம். அதனால் மூன்றும் நம்பர் வைத்துள்ளவர்களைப் பங்கு அழைக்கிறார்கள்.

'அதெல்லாம் வேண்டாம்' என்று நிர் மானித்துக் கொண்டார் சாம்பசிவம். அதில் சில சமயங்களில் பெரிய தவறுகள் கூட வருமாம்.

நாலாவது பந்தயம் ஆயிரத்து இருநூறு மீட்டர் தூரம். அதிகப் பரபரப்பு ஏற்படுத் தாமல் சாம்பசிவம் வைத்திருந்த சூர்யா வெற்றிபெற்று விட்டது.

ஜாக்பாட் நாலு பந்தயங்களில் வெற்றி பெற்ற டிக்கட்டுகள் பதினாறு. அதில் சாம்ப சிவத்தின் டிக்கட் ஒன்று.

சாம்பசிவத்துக்கு இருப்புக்கொள்ளவில்லை. அங்கும் இங்கும் நடந்தார். லேர்க்கடலை வாங்கிக் கொரித்தார். டிக்கட் பத்திரமாக இருக்கிறதா என்று தொட்டுப் பார்த்துக் கொண்டார். 'ராஜத்துக்கு அவள் ஆசைப் பட்ட வைரக் கம்மல் வாங்கிக் கொடுத்துவிட வேண்டும். ராமபத்ரன் வாங்கியிருக்கும் 'ப்ளாட்' பக்கத்தில் ஓர் இரண்டு கிரவுண்ட் வாங்கிப் போட வேண்டும்....

குதிரைகள் மைதானத்துக்கு வந்தன. எட் டாம் நம்பர் 'சார்மிங்' கறுப்பாக அழகாக இருந்தது. அதன் ஜாக்கி ஸ்மித் பச்சை உடையும், வெள்ளைத் தொப்பியும் அணிந் திருந்தார். அயர்லாந்தின் சிறந்த ஜாக்கி என்று 'மெயில்'ல் வர்ணித்திருந்தார்கள்.

'ஸ்மித், எப்படியாவது வின் அடித்து விடப்பா' என்று மானசீகமாக வேண்டிக் கொண்டார் சாம்பசிவம்.

அது இரண்டாயிரம் மீட்டர் தூரப் பந் தயம். பதினொரு குதிரைகள் போட்டி யிடுகின்றன.

பந்தயம் ஆரம்பமாயிற்று. முதலில் 'சார் மிங்' நாலாவது, ஐந்தாவது இடத்திலிருந் தது. ஆயிரத்து அறுநூறு மீட்டரைத் தாண் டும்பொழுது சார்மிங் எட்டாவது இடத்தி லிருந்தது. சாம்பசிவம் கைகளைப் பிசைந்து கொண்டார். ஆயிரம் மீட்டரை அடைந்த போது 'ஸ்டெல்லா'வும், 'கிரீன் ஸ்கிரீனு'ம் தான் முதலில் வந்து கொண்டிருந்தன. சார் மிங் கடைசி 'பஞ்ச்'சில் இருந்தது. சாம்ப சிவம் நம்பிக்கை இழந்து விட்டார்.

கடைசி வளைவைத் தாண்டும்பொழுது 'சார்மிங் இஸ் கம்மிங் அப்' என்று காமென் டேட்டரின் குரல் ஒலித்தது. ஒரு நம்பிக்கைக் கதிர். நேர்ப் பாதையில் நானூறு மீட்ட ரைத் தாண்டும்பொழுது ஸ்டெல்லா தளர்ந்து விட்டது. சார்மிங் பாய்ந்து முன்னேறிற்று. கடைசி நூறு மீட்டரில் 'சார்மிங்கு'க்கும் 'கிரீன் ஸ்கிரீ'னுக்கும் கடும் போட்டி. ஒன்றையொன்று வெல்ல முயன்றன. அதற் குள் வின்னிங் போஸ்ட் வந்து விட்டது. எது ஜயித்தது? சரியாகத் தெரியவில்லை.

'ஃபோட்டோ ஃபினிஷ்' என்று அறிவிக்கும் சிவப்புப் போர்டு மாட்டப்பட்டது.

சாம்பசிவத்தின் இதயம் படுவேகமாக அடித்துக் கொள்வதை அவரால் உணர முடிந்தது. உடம்பே சூடேறி விட்டது. பி. ஏ. பரீட்சை முடிவுக்காகப் பேப்பரைப் பிரித்துப் பார்க்கும்போது ஏற்படாத ஒரு பரபரப்பு. முதல் பிரசவத்தின்போது அறைக்கு வெளியே நின்று கொண்டிருந்தபோது ஏற்படாத ஒரு தவிப்பு. படபடப்பு. அப்பொழுதுகூட வேண்டாத தெய்வங்களை இப்பொழுது வேண்டிக் கொண்டார். வேர்வை ஆறாகப் பெருகி வழிந்தது.

சிவப்பு போர்டு கழற்றப்பட்டது. நம்பர் மாட்டப்பட்டது. எட்டு.

தம் வயதை மறந்து கையை உயர்த்தித் துள்ளிக் குதித்தார் சாம்பசிவம். பிறகு அவருக்கே கொஞ்சம் வெட்கமாகப் போய் விட்டது. ஓர் ஒதுக்குப்புறமாக நடந்து போய் நின்றார். டிக்கட்டை எடுத்து ஒரு முறை நம்பர்களைச் சரிபார்த்துக்கொண்டார்.

'ஜாக்பாட் தொகை ரூபாய் அறுபத்து நாலாயிரத்து நூற்றி இருபத்தி எட்டு. வெற்றி பெற்ற டிக்கட்டுகள் ஐந்து' — ஒலி பெருக்கி அறிவித்தது.

சாம்பசிவத்தின் மனத்தில் மகிழ்ச்சி கொப்பளித்தது. அறுபத்தையாயிரம்.... பஞ்சம் தீர்ந்தது. ரமேஷை டாக்டராக்கி விட லாம். அடையாற்றில் வீடு கட்டிவிடலாம்.

டிக்கட்டைக் கொடுத்து 'செக்' வாங்கிப் பத்திரமாகப் பையில் வைத்துக் கொண்டு வெளியே வந்தார் சாம்பசிவம். கற்பனையில் ஆழ்ந்தவாறு ரயில்வே ஸ்டேஷனை அடைந்த போதுதான் டாக்ஸியில் போயிருக்கலாமே என்று தோன்றிற்று. ஏகப்பட்ட கூட்டம். 'இரண்டு வண்டிகள் போகட்டும். கூட்டம் குறைந்துவிடும்' என்று எண்ணி ஓர் ஓரமாக நின்றார்.

''இந்தப் புத்தி ரேஸுக்கு வரதுக்கு முன் னாலே இருந்திருக்க வேண்டும். இப்ப அழுது என்ன பிரயோசனம்?''



# உங்கள் குழந்தையை அழவிடுவீர்களா?



அவன் எப்போதும் காரணத்தோடு தான் அழுகிறான். அவனுடைய அணையாடை நனைந்திருக்கலாம் அல்லது ஏதாவது குண்டூசி அவனைக் குத்தியிருக்கலாம். ஒரு வேளை தாங்கமுடியாத உஷ்ணத்தினாலோ, பசியினாலோ அல்லது வரட்சியினாலோ அவன் அழலாம். அப்படியாயின் அவனுக்கு க்ளாக்ஸோ ஸன்ஷைன் அல்லது ஆஸ்டர்மில்க் அல்லது க்ளாக்ஸோஸ்-டி யைச் சிறிது தண்ணீருடன் சேர்த்துக்கொடுங்கள்.

அல்லது தோளில் போட்டு அவனைத் தட்டிக் கொடுக்க வேண்டுமா? ஒரு வேளை பல விருந்தினர்களைப் பார்த்து அவனுக்கு எரிச்சல் உண்டாகிறதா? அவனைத் தாலாட்டி உறங்க வைப்பதே, இப்போது அவனுக்குத் தேவை. ஜலதோஷமோ அல்லது வயிற்றுக்கோளாறோ உங்கள் குழந்தையின் புன்சிரிப்பைப் பாழாக்கி விடலாம். அவனுக்கு ஒரு கரண்டி க்ரைப் மிக்சரைக் கொடுங்கள், அத்துடன் டாக்டரிடம் ஆலோசனை கேட்கவும்.



நீங்கள் உங்கள் கண்மணியைக் கொஞ்சி அன்புடன் முத்தமிட வேண்டும். உங்கள் குழந்தை அழுதால் அதைப் பற்றிக் கவலைப் படாதீர்கள், அதே நேரத்தில் பாராமுக மாகவும் இருக்காதீர்கள். குழந்தை அழுவதன் காரணங்களைத் தாய்மார் கள் விரைவில் கண்டு பிடித்துவிடுவார்கள்!





டாக்டரின் அறிவுரை :

## அணையாடையால் உண்டாகும் சொறிவகை

குழந்தையின் ஈரமுள்ள அணையாடையினாலும் படுக்கையினாலும் அவனுக்குச் சொறிவகைகள் ஏற்படலாம். அதை நீக்க நீங்கள் செய்ய வேண்டியது இதுவே: கூடியமட்டும் பாதிக்கப்பட்ட இடங்களைச் சுத்தமாக உலர வைப்பதுடன் அவற்றின் மீது போரேடெட் டால்க் பவுடரைத் தூவுங்கள். இதனால் குழந்தையை அடிப் பாகத்தில் துணியில்லாமல், வெதுவெதுப்பான அறையில், பலமணிநேரங்கள் வெதுவெதுப்பாக வைத்திருக்க முடிகிறது. முன்னெச்சரிக்கையாக, உங்கள் டாக்டர் சிபாரிசு செய்தபடி, அணையாடையையும் துணிகளையும் கிருமிநாசினி மருந்துடன் நீரில் கொதிக்கவைப்பதுடன் அவற்றை வெய்யிலில் காயவையுங்கள். பின்னும் சொறிகள் குண மடையாவிட்டால் டாக்டரிடம் ஆலோசனை கேட்கவும்.





புத்தகங்களைத் தவிர இலவச அன்பளிப்புகளை, அன்பளிப்பு சீட்டுகளில் குறித்துள்ள கேந்திரங்களில் நீங்களாகவே சேகரித்துக்கொள்ளவேண்டும். புத்தகங்கள் உங்களுக்குத் தபால் மூலம் அனுப்பப்படும்.

உங்களை உறுப்பினராகத் தேர்ந்தெடுத்த பிறகு, இந்தியாவில் நீங்கள் எங்கிருந்தாலும் இலவச புத்தகங்கள் (பேபி கேர், பேபி டயரி மற்றும் பேபி கேம்ஸ்) அனுப்பப்படும்.

விண்ணப்பங்கள் 1976 அக்டோபர் 31ந்தேதி வரை ஏற்கப்படும்.

IP/GL/8/76 TM

## தர்மாத்மா வீட்டில் திருடன்

தர்மாத்மாவின் வீட்டில் திருடன் நுழைந்து வெகுநேரம் தேடிப் பார்த்தும் ஒரு பொருளும் கிடைக்கவில்லை. இதைப் பார்த்துக் கொண்டிருந்த அவர் திருடன் ஏமாற்றம் அடையாதிருக்க வேண்டித் தாம் போர்த்திக் கொண்டிருந்த கம்பளத்தைக் கழற்றி அவன் தப்பிப் போகும் வழியில் எறிந்தார்.

உண்மையான தர்ம புருஷர்கள் சத்துரு மனத்தைக்கூட நோகச் செய்யமாட்டார்கள்.

ஸா அதி - குமரிமலர்



குரல் வந்த திசையில் பார்த்தார் சாம்பசிவம். முழங்காலைக் கட்டிக் கொண்டு தலையில் முண்டாக அணிந்த ஒரு கிழவர் சுவரோரமாக அமர்ந்திருந்தார். வாடிய முகம். அழாத குறை. பக்கத்தில் நின்றிருந்த நடுத்தர வயதுக்காரர் இட்டிக் கொண்டிருந்தார்.

''பையன் பரீட்சைக்குக் கட்டற பணத்தை எடுத்துக்கிட்டு ரேஸுக்கு வரலாமா சார்? நீங்களே சொல்லுங்க. நாளைக்குத்தான் கடைசித் தேதியாம் பணம் கட்ட...''

சாம்பசிவத்தின் மனத்தில் ஏதோ நெருடிற்று. தாம் ஜெயித்த இந்தப் பணத்தில் இதோ இந்தக் கிழவனாரின் பங்கும் இருக்கிறது. ஒரு பையனைப் பரீட்சை எழுத முடியாமல் செய்யும் பணம் தம் பாக்கெட்டில் இருக்கிறது...

ஒரு வண்டி வரவே அவர்கள் ஓடிச் சென்று ஏறிக் கொண்டார்கள்.

அடுத்த வண்டியில் சாம்பசிவம் ஏறினார். கூட்டம் கொஞ்சம் குறைந்திருந்தது. அவர் மனத்தில் கிழவனாரின் முகம் அசையாமல் நின்றது.

கோடம்பாக்கத்தில் இறங்கி நடந்தார் சாம்பசிவம். பாலத்துப் பக்கம் வந்தபோது ஒரு பெண்ணின் அழுகையும் கூக்குரலும் கேட்டன.

''பொண்ணு கல்யாணத்துக்குன்னு நாயா கஷ்டப்பட்டுக் குருவி சேர்க்கிறாப்பலே சேர்த்து வைச்சேன். எல்லாத்தையும் எடுத்திட்டுப் போய் ரேசிலே உட்டுட்டு வந்துட்டான் பாவி. இந்த அநியாயம் உண்டான்னு கேட்டா குடிச்சுட்டு வந்து அடிக்கிறான்...'' தலைவிரி கோலமாக ஒரு பெண் உரக்கப் புலம்பினாள்.

சாம்பசிவத்தின் மனத்தில் ஏதோ உறுத்த ஆரம்பித்தது. இதயத்தில் யாரோ பிராண்டுகிறார்களா? திடீரென்று எப்படி ஒரு சுமை ஏறிற்று மனத்தில்? ஒரு பெண்ணின் கல்யாணம் நின்று போனதற்குக் காரணமான பணம் தம் பாக்கெட்டில் இருக்கிறது.

அதற்குள் வேறொரு பெண் அங்கே வந்தாள்: ''அதையேன் கேக்கறே பொன்னம்மா. எங்க வூட்டுக்காரன் அரிசி வாங்க வைச்சிருந்த பணத்தை எடுத்திட்டுப் போய் ரேசாடிட்டு வந்துட்டான்... பசங்க இன்னிக்குக் கொலைப் பட்டினிதான்...'' அவள் கண்களில் தாரை தாரையாக நீர் வழிந்தது.

'ஒரு குடும்பம் பட்டினியாகக் கிடக்கக் காரணமான பணத்தையா நான் ஜெயித்தேன்?'

சாம்பசிவத்தின் மனம் ஒரு போர்க்களமாயிற்று.

'ஓர் ஏழை மாணவனைப் பரீட்சை எழுத விடாமல் தடுத்த பணத்தைக் கொண்டு என் மகன் படித்து முன்னுக்கு வரவா?'

'ஓர் ஏழைப் பெண்ணின் கல்யாணம் நிற்பதற்குக் காரணமாக இருந்த பணத்தைக் கொண்டு என் மகள் திருமணத்தை நடத்துவதா? அவள் வாழ்வு விளங்குமா?'

'ஓர் ஏழைக் குடும்பம் பட்டினியாகக் கிடக்கக் காரணமான பணத்தால் நான் வீடு கட்டி வாழ்வதா?'

'இதுபோல் இன்னும் எத்தனை ஏழைகளின் அவலத்துக்குக் காரணமாக இருக்குமோ இந்தப் பணம்?'

அவருக்குத் தம்முடைய அப்பா பரமேசுவர அய்யரின் முகம் மனக் கண் முன் தோன்றிற்று. பள்ளி ஆசிரியராக இருந்து அவர் ரிடையரானபோது எந்த விதச் சேமிப்புமில்லை அவரிடம். வறுமைதான் எஞ்சி நின்றது. அவரிடம் நல்ல நிலையிலிருந்த பாலகிருஷ்ணன் ஒரு பெரும் தொகையை அன்பளிப்பாகத் தர முன்வந்தபோது அவர் கூறிய சொற்கள் இன்னும் நினைவிருக்கின்றன சாம்பசிவத்துக்கு: 'நான் உழைச்சுச் சம்பாதிச்சுச் சாப்பிடத்தாம்பா விரும்பறேன். சும்மா யார் கொடுத்தாலும் அதைத் தொட மாட்டேன்.'

'அப்படிப்பட்டவருடைய மகனா நான் இன்று இப்படி நடந்து கொண்டேன்?' சாம்பசிவத்தின் உடலும் உள்ளமும் கூசின.

அந்த ஏழைகளின் கண்ணீரும், நெஞ்சக் குமுறலும் துயரமும் ஒன்றுசேர்ந்து 'செக்'காக உருமாறித் தம் பாக்கெட்டில் கிடப்பது போல் ஒரு பிரமை ஏற்பட்டது சாம்பசிவத்துக்கு. 'அது செக் அல்ல; பாவமூட்டை!'

அவரால் நடக்கக்கூட முடியவில்லை. கால்கள் பின்னின. நடை தள்ளாடிற்று.

எதிரே 'மொபைல் போஸ்டாபீஸ் வேன்' வந்து நிற்பது தெரிந்தது. சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தார் சாம்பசிவம்.

'செக்'கின் பின்புறம் கையெழுத்திட்டார். 'அஸ்ஸாமில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களுடைய நலனுக்கு' என்று குறிப்பிட்டுப் பிரதம மந்திரியின் நிவாரண நிதிக்கு ரிஜிஸ்தர் தபாலில் அனுப்பி வைத்தார். அவருடைய மனத்தில் ஒரு நிறைவான அமைதி நிறைந்திருந்தது.

சட்டைப் பையைத் தொட்டுப் பார்த்தார். பதினைந்து பைசாதான் இருந்தது. பஸ்ஸில் போக முடியாது. சாம்பசிவம் கவலைப்படவில்லை. நடக்க ஆரம்பித்தார். இப்பொழுது அவரால் வேகமாகவும் உற்சாகமாகவும் நடக்க முடிந்தது.

மனச் சுமை இறங்கி விட்டதுதான் காரணமோ?

நாள் முழுவதும் நீடிக்கும்
நறுமணத்திற்கும் சருமப்
பாதுகாப்பிற்கும் உங்கள்
அபிமான நடிகை
சுஜாதா
உபயோகிப்பது

# ராதாஸ்
## ஆயுர்வேத சோப்




குளிர்ச்சியும்,
நறுமணமும் தரும்
இந்த ஆயுர்வேத சோப்
ராமச்சம். கஸ்தூரி மஞ்சள்,
கச்சோலம், ஓமம்,
மரவெட்டி எண்ணெ
ஆகியவைகளால்
தயார் செய்யப்படுவது.
மிருகக் கொழுப்புச்
சத்தோ, செயற்கை
மணமோ கலவாதது.



தயாரிப்பவர்கள்:
**ராதாஸ் ஆயுர்வேதிக்**
**சோப் ஒர்க்ஸ்** கொல்லம்-2 (கேரளா)

# புது உலகம் கண்டேன்!

நா. பார்த்தசாரதி

## 8. போலந்தின் தலைநகரம்

சோவியத் யூனியனில் எனது சுற்றுப் பயணம் முடிந்ததும் மாஸ்கோவில் இருந்து போலந்தின் தலைநகராகிய வார்ஸாவுக்குப் போய்ச் சேர்ந்தேன். வார்ஸா — புறப்படுவதற்காக மாஸ்கோ விமான நிலையத்தில் காத்திருந்தபோது காதுகளைத் தீட்டிக் கொண்டு காத்திருந்தேன் என்று சொல்வதுதான் பொருத்தமாக இருக்கும். ஏனென்றால் விமானத்தைத் தவற விட்டுவிடக் கூடாது என்ற பயம்தான் காரணம். 'வார்ஸா' — என்று காதில் கேட்டால்தான் அது போலந்தின் 'தலைநகரம்' என்று எனக்கும் உங்களுக்கும் புரியும். ஆனால் கிழக்கு ஐரோப்பாவில் பல இடங்களிலும், குறிப்பாக மாஸ்கோவிலும் 'வர்ஷ்ஷாவா' என்று அதை உச்சரிக்கிறார்கள். 'மூனிச்' என்றால்தான் நமக்குப் புரியும். அவர்கள் 'முன்ச்சென்' என்று உச்சரிக்கிறார்கள். 'ஃபிராங்க்ஃபோர்ட்' என்றால்தான் நமக்குப் புரியும். அவர்கள் 'ஃபிராங்ஃபுர்த்' என்கிறார்கள். எச்சரிக்கையாக இராவிடில் இந்தப் பெயர்க் குழப்பம் தொடர்ந்து வேறு பல குழப்பங்களை உண்டாக்கிவிடும்.

ஒரே சமயத்தில் பல்வேறு நாடுகளுக்குப் பல்வேறு விமானப் பயணிகள் காத்திருக்கும் ஒரு பெரிய லவுஞ்சில் — ரஷ்யனில் அறிவிக்கப்படும் அறிவிப்பை ஒரு விநாடி கவனியாமல் பராக்குப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டால் போக வேண்டிய விமானத்தைக் கோட்டை விட்டுவிட நேரிடும். மாஸ்கோ சர்வதேச விமான நிலையமாகிய 'ஷெர்மத்தோவா' (Sheremetovo) வில் போலந்தின் தலைநகராகிய வார்ஸாவுக்குப் போகக் காத்திருந்த போது — போலிஷ் விமானமாகிய 'லாட்' (Lot) டிக்கட்டும் அதன் போர்டிங் கார்டும் வைத்திருந்த ஒருவருக்குப் பக்கத்திலேயே அட்டை போல் ஒட்டிக் கொண்டிருந்து கவனமாக விமானம் ஏறினேன். அவ்வளவு முன் ஜாக்கிரதை தேவையாக இருந்தது.





★ போலிஷ் மாணவிகள் தமிழ் கற்கிறார்கள்.

★ போலிஷ் மாணவிகள் இந்தி கற்கிறார்கள்.

கிழக்கு ஐரோப்பிய நாடுகளில் போலந்துக்கு மட்டும் ஒரு தனிச் சிறப்பு உண்டு. அது கிழக்கு ஐரோப்பிய நாடுகளோடு சேர்த்து எண்ணப்பட்டாலும் மேற்கு ஐரோப்பிய நாடுகளுக்கும் கிழக்கு ஐரோப்பிய நாடுகளுக்கும் நடுவே அது அமைந்திருக்கிறது. மாபெரும் உலக யுத்தங்களால் தரை மட்டமாக அழிக்கப்பட்ட ஒருநாடு இன்று மறுபடியும் தொழில்

விஞ்ஞான வளர்ச்சிகளால் நிமிர்ந்து மேல் எழுந்து நிற்க முடியும் என்பதைப் போலந்து கண்ணாரக் காணும் உதாரணமாக இருந்து உலகுக்கு நிரூபிக்கிறது. போலந்தின் தலைநகராகிய வார்ஸா இருந்த சுவடே தெரியாமல் இரண்டாவது உலகப் பெரும் போரில் நாஜிப் படைகளால் ஹிட்லரின் ஆணையின் பேரில் அழிக்கப்பட்டது என்பது சரித்திரம்.



★ வார்ஸா விஞ்ஞான கலாசார மாளிகை.

ஆனால் மீண்டும் புது மலர்ச்சியோடு — புத்துயிர் பெற்ற நகரமாக விண் முட்டும் கட்டிடங்களோடும், பசிரென்று துப்புரவான சாலைகள் சோலைகளோடும் அது இன்று பூத்துப் பொலிகிறது. இன்றைய வார்ஸாவைப் பொருளாதார வல்லுநர்கள் ஒரு பொருளாதார விந்தை(Economic Miracle)என வர்ணிக்கிறார்கள். ஊர் உலகத்துக்குக் காட்டுவதற்காகப் போர்க் கால இடிபாடுகள், அழிவுகள் சிலவற்றை இன்னும் பத்திரப்படுத்தி வைத்திருக்கிறார்களே தவிர இன்றைய 'வார்ஸா' நகரத்தைப் பார்த்தால் 'இதுதான் போரில் முழுமையாக அழிந்து மீண்டும் உருப்பெற்ற புது நகரம்' என்று யாராலும் நம்பவே முடியாது.

எல்லா ஐரோப்பிய நகரங்களையும் அழகுபடுத்துவது நகரின் நடுவே ஓடும் ஒரு நதிதான் என்றால் மிகையாகாது. மாஸ்கோவில், மாஸ்கோ நதியும் லண்டனில் தேம்ஸும், பாரிஸில் ஸேன் ஆறும் ரோமாபுரியில் டைபர் ஆறும் வார்ஸாவில் 'விஸ்டுலா' (Vistula) நதியும் பாய்கின்றன. நம் ஊரில் 'ஸ்தல புராணம்' என்று ஒரு தொடரை அடிக்கடி கேள்விப்படுகிறோமே அப்படி ஒவ்வோர் — ஐரோப்பிய நாடுகளுக்கும் நகரங்களுக்கும் ஒரு பழங் கதை ( Legend ) ஸ்தல புராணமாக இருக்கிறது. போலந்தின் தலைநகரமாகிய வார்ஸாவுக்கும் ஒரு ஸ்தல புராணம் இருக்கிறது. அந்த நகரைக் காக்கும் காவல் தேவதை போன்ற ஒரு கடற்கன்னி (Mermaid) கையில் வாள் கேடயத்தோடு நதி உற்பத்தியாகிற ஊற்றுக் கண்ணில் கிடைத்ததாகப் பழங்கதை கூறுகிறது. இதைப் பற்றிய ஆராய்ச்சிகள், கருத்து வேறுபாடுகள் பாட பேதங்கள் வார்ஸாவில் நிறைய இருக்கின்றன. போலந்து ஆராய்ச்சியாளர்களும் நம்மூர் மொழி ஆராய்ச்சியாளர்களைப் போலத்தான் என்று இதிலிருந்து புரிந்தது. எப்படியோ பழைய காலத்திலிருந்து வார்ஸாவுக்கும் போலந்துக்கும் முக்கிய முத்திரைச் சின்னமாக ஆயுதம் தாங்கிய இந்தக் கடற்கன்னி ஆகிவிட்டாள். வார்ஸா நகரில் பல இடங்களில் இந்தக் கடற்கன்னிக்குச் சிலைகள் இருக்கின்றன. வார்ஸா நகரையே உருவகப்படுத்துவதாக இந்தக் கடற்கன்னி சிலை கருதப்படுகிறது. நகரில் ஓடும் விஸ்டுலா நதி கரை மீறிப் பொங்காமலும், ஊரை அழிக்காமலும் இந்தக் கடற் கன்னி சிலையே பாதுகாப்பதாக வார்ஸாவில் ஒரு பழைய நம்பிக்கையும் உண்டு. வார்ஸாவிலும், போலந்தின் பிற பகுதிகளிலும், — சில வெளிநாடுகளிலும்கூடப் போலிஷ் கலாசார பாரம்பரியத்தின் புகழ் முத்திரையாக இந்தச் சின்னத்தைக் கருதுகிறார்கள், போற்றுகிறார்கள்.

இரண்டாவது உலக யுத்தத்தைப் பற்றிய பற்பல ஆங்கிலத் திரைப்படங்களில் நான் முன்பே பார்த்திருந்த வார்ஸா நகருக்கும் நேரில் பார்த்த புது வளர்ச்சி பெற்ற இன்றைய வார்ஸா நகருக்கும் நிறைய வேறுபாடுகள் இருந்தன. பழைய வார்ஸாவை அடையாளம் தெரிந்துகொள்ள வேண்டு




★ வார்ஸா நகரக் காவல் தேவதையான கடற்கன்னி.

மானால் இன்றும் நகரின் ஒரு பகுதியாக இருக்கும் பழைய வார்ஸா மார்க்கெட் சதுக்கம் (Old warsaw Market Squzre) பகுதிக்குப் போக வேண்டும். அங்குள்ள சர்ச்சுகள், கட்டிடங்கள், தரையில் கல் தளம் பரவிய சாலைகள், குழாயடிகள், நெருக்கடியான உணவு விடுதிகள், கடைகள் ஆகியவற்றைப் பார்க்கும் போதுதான் நமக்குப் பழைய வார்ஸா நகரம் நினைவுக்கு வரும். புதிய வார்ஸாவின் கம்பீரமான வானளாவிய கட்டடங்களில் முக்கியமானவை, விஞ்ஞான கலாசார மாளிகை (Palace of Science and culture) ஃபோரம் ஹோட்டல், கிராண்ட் ஹோட்டல், செண்ட்ரம் சூப்பர் மார்க்கெட் முதலியவை. இவை நியூயார்க் பாணி ஸ்கை ஸ்க்ரேப்பர்கள் ஆகும். விஞ்ஞான கலாசார மாளிகை தான் வார்ஸாவின் ஐஃபில் டவர் போல் விளங்குகிறது. அதன் கடைசி மாடியிலிருந்து வார்ஸா நகரம் முழுவதையும் பார்க்க முடிவதனால், 'பனோரமா' (Panorama) என்றும் அதற்கு இன்னொரு பெயர் வழங்குகிறது. ஸ்டாலின் காலத்தில் சோவியத் யூனியனின் பொருளுதவியில் கட்டிக் கொடுக்கப்பட்ட பெரிய கட்டிடமாகும் அது.

சுற்றுப் பிரயாணிகளுக்குப் பெரிய வசதி — தெரு முனைகளிலும் முக்கிய இடங்களிலும் இருக்கும் (Ruch) 'ரூஷ்' என்னும் பெட்டிக் கடைகளாகும். இவற்றிலேயே நமக்குத் தேவையான பஸ், டிராம் டிக்கட்டுக்களை வேண்டிய அளவு வாங்கி வைத்துக் கொள்ளலாம். போலிஷ் மொழியில் 'ரூஷ்' என்றால் இயங்குதல் (Movement) என்று பொருள். மக்கள் இருப்பிடத்திலிருந்து புறப்பட்டு வெளியே இயங்கும் போது தேவையான சிறு சிறு பொருள்கள் யாவும் விலை வித்தியாசப்படாமல் நாடு முழுவதும் இந்தப் பெட்டிக் கடைகளில் கிடைக்கும். போலந்து முழுவதும் உள்ள இப்படிப்பட்ட எல்லாக் கடைகளுக்கும் ஒரே பொதுப் பெயர் 'ரூஷ்'. அந்தப் பெயரை எங்கே பார்த்தாலும் நமது சில்லறைப் பண்டங்களைப் பற்றிய கவலை தீர்ந்துவிடும். பஸ் டிக்கெட்டுக்களைப் பஸ்ஸில் தான் வாங்க வேண்டும் என்பதில்லை. இந்தக் கடைகளிலேயே வாங்கிக் கொள்ள முடியும்.

வார்ஸா நகரில் பார்க்க வேண்டிய இடங்கள், வயலின் இசை மேதை ஷோப்பின் பிறந்த இடம், நேஷனல் மியூஸியம், — விலானேவ் அரண்மனை, தியேட்டர் வேல்கி, பழைய வார்ஸா மார்க்கெட் சதுக்கம், அந்தச் சதுக்கத்தின் அருகே பன்னிரண்டு ராசிகளும் பன்னிரண்டு மணிகளாக டயல் அமையும் படி சுவரில் இருக்கும் ஒரு பெரிய பழங்கால ராசி சக்கர கடிகாரம், லெஷன்கி அரண்மனையும், ஏரியும், அதைச் சுற்றியுள்ள பிரம்மாண்டமான தோட்டமும் என்பன.

ஐரோப்பிய நகரங்களிலேயே வார்ஸா ஒன்றில்தான் இரண்டு இந்தியப் பெரியார்களின் பெயர்களில் தெருக்கள் இருக்கின்றன. வார்ஸா நகரில், மகாத்மா காந்தி தெரு, இரவீந்திரநாத் தாகூர் தெரு என்று இரண்டு தெருக்கள் உண்டு.

பழைய வார்ஸா சதுக்கத்தின் அருகே உள்ள வரலாற்று மியூஸியத்தில் இரண்டாவது உலகப் பெரும் போரின் போது 'வார்ஸா எவ்வாறு அழிக்கப்பட்டது?' என்பதை உருக்கமான செய்தி விளக்கத் திரைப்படம் ஒன்றின் மூலமாகக் காண்பிக்கிறார்கள். அந்தச் செய்திப் படத்தைப் பார்த்துவிட்டு வெளியே வந்து சிறிது தொலைவு தள்ளி வானளாவிய அடுக்கு மாடிக் கட்டிடங்களோடு புதிதாக எழும்பி நிற்கும் இன்றைய வார்ஸாவைப் பார்த்தால் மிகச் சில ஆண்டுகளுக்குள் எப்படி இந்த அதிசய மாற்றம் நிகழ்ந்தது என்று ஆச்சரியப்படத்தான் தோன்றுகிறது. மனத்தில் ஒரு கேள்விக்குறிகூட எழுகிறது. முதலில் ஆச்சரியம். பிறகு கேள்வி.

ஆனால் அடுத்த கணமே தெருவிலும் நாம் நிற்கிற இடத்திலும் நம்மைச் சுற்றிலும் தென்படுகிற போலிஷ் மக்களைப் பார்த்தால் அந்தக் கேள்விக் குறிக்கு விடை கிடைத்துவிடுகிறது. போலிஷ் மக்கள் அடக்கமானவர்கள். சிரத்தையாக உழைப்பவர்கள். பொறுமையும், நிதான குணமும் நிறைந்தவர்கள். அன்பாகவும், இதமாகவும் பழகக் கூடியவர்கள். நிலக்கரியும், சுரங்கத் தொழிலும் (mining) அவர்களது முக்கிய ஆதாரங்கள். விஞ்ஞான கனரகத் தொழில்களிலும் சுரங்கம் சம்பந்தமான தொழில்களிலும் அவர்கள் நிபுணத்துவம் பெற்றிருக்கிறார்கள். நம் நாட்டில் சமீபத்தில் பீகார் நிலக்கரிச் சுரங்கத்தில் சாஸ்நலா விபத்து ஏற்பட்டபோது சுரங்கங்களுக்குள்ளே சிக்கிவிட்டவர்களை மீட்பதற்கான நவீன சாதனங்களை விரைந்து அனுப்பிய நாடுகளில் போலந்தும் ஒன்று.

மாஸ்கோ போலன்றி வார்ஸா நகரில் பெரிய ஹோட்டல்களிலும் சாதாரண உணவு விடுதிகளிலும் சிற்றுண்டி, காப்பி, தேநீர், பகலுணவு, இரவு உணவு விலைகள் ஏற்றத் தாழ்வு உள்ளவை. பெரிய ஹோட்டலில் பகலுணவு 100 ஸ்லாட்டி (போலிஷ் நாணயம்) ஆகும் என்றால் மலிவு ரக 'மில்க் பார்' ஒன்றில் அதே பகல் உணவை 15 ஸ்லாட்டிக்குள் முடித்துக் கொள்ளலாம். சோவியத் யூனியனின் இன் டூரிஸ்ட் (In tourist) இலாகா போல வார்ஸா நகரிலும், மற்ற நகரங்களிலும் உள்ள பெரிய ஹோட்டல்களை ஆர்பிஸ் (Orbis) என்ற அரசாங்கச் சுற்றுலா நிறுவனம் நிர்வகிக்கிறது. வெளிநாட்டார் போலந்தைச் சுற்றிப் பார்ப்பதற்கான ஏற்பாடுகள் அனைத்தும் 'ஆர்பிஸ்' மூலமாகவே நடக்கிறது.

வார்ஸாவில் உள்ள கிராண்ட் தியேட்டர் அருகே 'இந்தோ — போலிஷ் நட்புறவுக் கழகம்' என ஒன்று இருக்கிறது. இதற்குள் ஒரு சிறிய அரங்கமும், உணவு விடுதியும் உண்டு. அந்த உணவு விடுதியில் வாரத்தின் சில நாட்களில் இந்தியக் கறி வகைகள் இந்திய உணவு வகைகள், சாப்பிடக் கிடைக்கும். அதற்கு நல்ல கிராக்கி உண்டு.

வார்ஸா பல்கலைக் கழகத்தில் இந்தியப் பிரிவு இருக்கிறது. வாரணாசியில் காசி இந்துப் பல்கலைக் கழகத்தில் சில காலம்



ஒரிஸ்ஸா மாநிலத்தில் உள்ள பரிபாத் என்ற இடத்தில் அண்மையில் சுபத்திரா அம்மனுக்குத் தேர்த் திருவிழா நடந்தது. அந்தத் தேரைப் பெண்கள் மட்டுமே இழுத்தார்கள்!

டெக்கான் ஹெரால்ட் - அனிதா ராமச்சந்திரன்

# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி

Sobhagya GR 74-2-Tam.



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லாவற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பவினமயான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைத்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ளதோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது; இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்—**
**தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.**

ஸ்ரீ குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)

தங்கிச் சிறப்பாகப் பணி புரிந்துள்ள போலிஷ் காரரான டாக்டர் பிரிஸ்கி (Dr. Briski) இந்தியப் பிரிவின் தலைவராக இருக்கிறார். அந்த இந்தியப் பிரிவின் கீழ் தமிழ்—மலையாள மொழிகளும் அரை டஜனுக்கு மேற்பட்ட போலிஷ் மாணவ மாணவிகளுக்குக் கற்பிக்கப் படுகிறது. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் கற்ற டாக்டர் இராம. சுந்தரம் வார்ஸா பல்கலைக் கழகத்தில் இந்தப் பிரிவைக் கவனித்துக் கொள்கிறார்.

வார்ஸாவில் தனியே இருக்கும் இவருடைய துணைவி மாலதி சுந்தரம் மாயூரத்தில் ஒரு பெண்கள் கல்லூரியில் விரிவுரையாளராக இருக்கிறார். இதனால் வார்ஸாவில் தனிக் குடித்தனம் நடத்தும் திரு சுந்தரம் தமது ஃபிளாட்டில் சகலவிதமான பலசரக்குச் சாமான்களையும் ஸ்டாக் செய்திருந்தார். வார்ஸா நகரின் பரபரப்புக்கு நடுவே ஒரு நாள் இரவு இவருடைய ஃபிளாட்டில் வற்றல் குழம்பு — அசல் தென்னிந்திய வற்றல் குழம்பு தயாரித்து மணம் கமகமத்தபோது இருவருக்கும் ஏற்பட்ட மகிழ்ச்சி சொல்லி முடியாது. ''வார்ஸாவில் வற்றல் குழம்பு'' என்று மோனையோடு சொல்லிப் பார்த்து மகிழ்ந்த சுந்தரம் அவர்களை, ''போதும், சார்! தமிழ்ப் பத்திரிகைகளின் துணுக்குகளுக்கான தலைப்புப் போல் இருக்கிறது'' என்று சிரித்துக் கொண்டே குறுக்கிட்டுச் சொல்லி விமர்சித்து வைத்தேன் நான்.

மறு நாள் வார்ஸா பல்கலைக் கழக இந்தியப் பிரிவில் எனக்கு வரவேற்பு அளித்தபோது அந்த ஆறேழு மாணவ — மாணவிகளும் நிறுத்தி நிறுத்தி மழலைத் தமிழிலேயே பேசியது கேட்க இன்பமாக இருந்தது. அவர்கள் விருப்பத்துக்கு இணங்க நானும் நிறுத்தி நிறுத்தி — வேகத்தைக் குறைத்துச் சிறிது நேரம் தமிழிலேயே பேசினேன். பின்பு சுந்தரத்தின் உதவியோடு என் தமிழ்ப் பேச்சும் ஆங்கிலப் பேச்சும் போலிஷ் மொழியில் பெயர்க்கப்பட்டன.

வார்ஸாவில் தமிழோசை முழங்கச் செய்த அந்த மாணவர்களுக்கு இந்திய மொழி, இந்திய இலக்கியங்கள் ஆகியவற்றில் இருந்த ஈடுபாடு உள்ளத்தை உருக்கியது. வார்ஸா பல்கலைக் கழகத்தின் இந்தியப் பிரிவை டாக்டர் பிரிஸ்கியும், டாக்டர் சுந்தரமும், மாணவர்களும் தங்களுக்குள் செல்லமாகவும், பிரியமாகவும், 'நாலந்தா' என்று அழைக்கிறார்கள். அதன் சுவர்களில் 'பஞ்ச தந்திரம்' 'ஸ்வப்பன வாசவதத்தா' ஆகிய நாடகங்களை அறிவிக்கும் போலிஷ் மொழியிலான சுவரொட்டிகளை அந்த மாணவர்கள் எழுத்துக் கூட்டி எனக்குப் படித்துக் காண்பித்தார்கள். மகாபாரதம், கீதை ஆகியவற்றைத் தியேட்டரிலும், டெலிவிஷனிலும் நாடகங்களாக நடத்திக் காட்டப் பலர் ஆர்வம் காட்டுவதாகவும், புத்தகங்களை வந்து கேட்பதாகவும், இந்தியத் தூதரகத்தில் சொன்னார்கள்.

வார்ஸாவில் 'தியேட்டர் வேல்கி'யின் ஒரு பகுதியில் நிறையச் சோதனை நாடகங்களும் புதுமுறை உத்தி நாடகங்களும் நடக்கின்றன. அங்கேயே அரங்குக்கு முன்பாக ஓவியங்கள், நவீன ஓவியங்கள், நவீன சிற்பங்களைக் காட்சிக்கு வைத்திருக்கிறார்கள். போலிஷ் நாடக வளர்ச்சி பற்றிய ஒரு கண்காட்சியும் நிரந்தரமாக இருக்கிறது. தியேட்டருக்குள் வருகிறவர்கள் நாடக வளர்ச்சி பற்றிய விரிவான அறிவை அதன் லவுஞ்சிலேயே பெற முடிந்த மாதிரி அப்பொருட் காட்சி அமைக்கப்பட்டிருந்த விதம் நன்றாக இருந்தது. வார்ஸாவின் மாலை நேரத்தைச் சுவையுள்ளதாக்கும் பெருமை தியேட்டர் வேல்கி எனப்படும் கிரேட் தியேட்டரைச் சேர்ந்ததாக இருக்கிறது. 700 வருஷத்து நகரை இட்லர் ஒரு மாதத்தில் இடித்துத் தகர்த்தான். 1939க்கும் 44க்கும் இடைப்பட்ட காலத்தில் வார்ஸா பலமுறை அழிந்தது. 20 ஆண்டு காலத்தில் அழிந்த சுவடு தெரியாமல் போலிஷ் மக்கள் அதைப் புதுப்பிறவி எடுக்கச் செய்து விட்டார்கள். (தொடரும்)

# தமிழகத்துக்குப் புதுப் பெருமை!

உபாத்தியாயர் என்றாலே, 'ஐயோபாவம்' என்று எண்ணுவோர் உண்டு. பிள்ளைகளைக் கட்டி மேய்ப்பதே சிரமசாத்தியமான காரியம் என்றால் அதற்கு மேல் அவர்களுக்குக் கல்வியும் போதிப்பது சாமானிய விஷயமல்ல. அதிலும் ஏதோ கடமை தீர்த்தோம் என்றில்லாமல் வகுப்பில் ஒவ்வொரு மாணவனுக்கும் புரிய வேண்டுமே என்ற சிரத்தையுடன் போதிப்பதென்றால், அத்துடன் அவர்களைச் சிறந்த குடிமகனுக்கப் பாடுபடுவதென்றால் அதற்குத் தியாக உணர்வுடன் செய்கிற காரியத்தில் நம்பிக்கையும் பெருமிதமும் கொண்டிருக்க வேண்டும். இத்தகைய சிறந்த



உபாத்தியாயர்களுள் ஒரு சிலர் ஆண்டு தோறும் மத்திய அரசினால் கௌரவிக்கப்படுகிறார்கள். 1975ம் ஆண்டில் இந்த நல்லாசிரியர் விருதை நாடெங்கும் உள்ள ஆசிரியர்கள், ஆசிரியைகள் பலர் பெற்றுள்ளனர். ஆசிரியர்களுள்,. விருதுபெற்ற அனைவரிலும் சிறந்தவராக திரு எஸ். துரைசாமி நாயுடு கருதப்பட்டு விசேஷப் பாராட்டும் சான்றிதழும் பெற்றுள்ளார். இவர் கோவை ஆர். கே. ஸ்ரீரங்கம்மாள் கல்வி நிலையத்தின் தலைமை ஆசிரியர். தமிழகத்துக்கு இத்தகைய மிகப் பெரிய கௌரவத்தை ஓர் ஆசிரியர் பெற்றுத் தருவது இதுவே முதல் முறையாகும்.

திரு எஸ். துரைசாமி நாயுடு அவர்களைக் கல்கி நேயர்களின் சார்பில் மனப்பூர்வமாகப் பாராட்டுகிறோம். அவரைத் தலைமை ஆசிரியராகக் கொள்ளும் பேறு பெற்ற ஆர். கே. ஸ்ரீரங்கம்மாள் கல்வி நிலையத்தினை வாழ்த்துகிறோம்.



**வாலிப - வயோதிக அன்பர்களே,**

வாலிப வயதில் செய்கிற தவறுதல்களே இப்போது உடல் கெட்டு பலவீனமடைந்து ரத்தக் குறைவு, சோர்வு, தலைவலி, உஷ்ணம், சோம்பல், கைகால் அசதி, பலவீனம், உடல்வலி, தூக்கக் குறைவு, ஆயாசம், களைப்பு, பீதி, வெட்கம், பயம், வெறுப்பு உண்டாகி மன வேதனையும் கஷ்டமும் அடைந்து வாழ்கிறார்கள். 78 வருட அனுபவம் பெற்ற நமது மருந்துகள் சாப்பிட்டுவர புத்துணர்ச்சி பெற்று நிம்மதியான வாழ்க்கை வாழலாம். வி. பி. பி.யில் பெற உடன் எழுதுக.

**ஒரு மாத மருந்துகள்**

**மிக உயர்தரம் செட் ரூ. 90. தங்க பஸ்பம், சிட்டுக்குருவி லேகியம் 60 வேளை – ரூ. 120 30 வேளை ரூ. 60.** போஸ்டேஜ் இலவசம். நேரில் ஆலோசனை பெற.

**1ந் தேதி நெல்லை :** நெல்லை லாட்ஜ், காலை 8 மணி முதல் 12 வரை

**1ந் தேதி நாகர்கோவில் :** ஸ்ரீ உடுப்பி கிருஷ்ண பவன், பிற்பகல் 2 மணி முதல் 4 மணி வரை

**2ந் தேதி மதுரை :** மணீஸ் கபே, காலை 8 மணி முதல் 2 மணி வரை

**2ந் தேதி புதுக்கோட்டை :** வஸந்தா லாட்ஜ், மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை

**3ந் தேதி காரைக்குடி :** A. V. M. P. L. ரெஸ்ட் ஹவுஸ், காலை 9 மணி முதல் 11 மணி வரை

**3ந் தேதி பட்டுக்கோட்டை :** அசோகா லாட்ஜ், பிற்பகல் 2 மணி முதல் 3-30 மணி வரை

**3ந் தேதி மன்னார்குடி :** மன்னை லாட்ஜ், மாலை 4-30 முதல் 6 மணி வரை

**4ந் தேதி திருச்சி :** ஹோட்டல் அஜந்தா, காலை 8 முதல் 2 மணி வரை

**4ந் தேதி கரூர் :** பெரியார் லாட்ஜ், மாலை 4 மணி முதல் 5-30 வரை

**5ந் தேதி தஞ்சாவூர் :** ராஜா ரெஸ்ட் ஹவுஸ், காலை 10 மணி முதல் 12 மணி வரை

**5ந் தேதி திருவாரூர் :** அபூபக்கர் பில்டிங், மாலை 2 முதல் 4 மணி வரை

**5ந் தேதி நாகப்பட்டினம் :** தினகர் விலாஸ், மாலை 5 முதல் 6 மணி வரை

**6ந் தேதி காரைக்கால் :** அசோக் லாட்ஜ், காலை 8 முதல் 10 மணி வரை

**6ந் தேதி கும்பகோணம் :** தாஜ்மஹால் லாட்ஜ், பகல் 12 மணி முதல் 2 மணி வரை

**6ந் தேதி மாயவரம் :** காளியாகுடி லாட்ஜ், மாலை 3 மணி முதல் 4-30 மணி வரை

**6ந் தேதி சிதம்பரம் :** ஜெயராம் லாட்ஜ், மாலை 5-30 மணி முதல் 7 மணி வரை

**7ந் தேதி பாண்டிச்சேரி :** அருணா லாட்ஜ், காலை 8 மணி முதல் 9-30 மணி வரை

**7ந் தேதி கடலூர் N. T. :** ஹோட்டல் பிருந்தாவனம், காலை 10-30 மணி முதல் 12 மணி வரை

கிளை : **41, நைனியப்பன் தெரு, மண்ணடி, சென்னை-1** போன் : **21448**

வைத்திய திலகம், வைத்தியராஜ் : **டாக்டர் எஸ். காளிமுத்து** R. M. P. (Ind.) V. V. C., A. M. I. H.

## பழனி சித்தர் வைத்தியசாலை (Regd.) பழனி-624 601

போன் : **316, 316A, வீடு : 420. பழைய தாராபுரம் ரோடு, பழனி.** தந்தி : **"சித்தர்"**

# அரும்பு அம்புகள்



அமரர் கல்கி

அத்தியாயம் 39

## தந்திரம்!

பவானி வீடு திரும்பும் நோக்கில் காரில் ஏறிப் புறப்பட்டவள், பாதி தூரம் போன உடனேயே மனம் மாறியவளாக ஹோம்ரூல் கோபாலகிருஷ்ண முதலியார் இல்லத்துக்குச் சென்றாள்.

பவானியைப் பார்த்ததுமே அவர், ''வாங்க, வாங்க ! ஒரு வார்த்தை சொல்லி அனுப்பியிருந்தால் நானே வந்திருப்பேனே '' என்றார்.

''அழகுதான் நீங்கள் எவ்வளவு பெரிய ஸீனியர் லாயர் ! உங்களை நான் கூப்பிட்டு அனுப்புவதா ?''

'' வயதால் பெரியவராக இருந்தால் போதுமா ? செல்வாக்கு என்று ஒன்று இருக்கிறதல்லவா ? அதோடு பெண்மைக்குரிய சலுகையும் உங்களுக்கு உண்டு. அதை மதிக்க வேண்டிய கடமை எனக்கு இருக்கிறது.''

''உங்கள் வாதம் இரண்டையுமே நான் ஏற்பதற்கில்லை. இந்த ஊரில் உங்களுக்கு இல்லாத செல்வாக்கு நேற்று வந்த எனக்கு என்ன இருக்கிறது ?'' என்றாள் பவானி. ''இரண்டாவது, ஆண்களோடு சரிநிகர் சமானமாகக் கருதப்பட வேண்டும் என்று தான் என்போன்றவர்கள் ஆசைப்படுவோமே யன்றிப் பெண் என்பதற்காகத் தனிச் சலுகை காண்பிப்பதை விரும்ப மாட்டோம்.''

'' சரி, உங்கள் விஜயம் அடியேனுக்கு நீங்கள் அளித்த கௌரவமாகவே இருக்கட்டும். என்ன சாப்பிடுகிறீர்கள்? காப்பி, டீ, ஓவல்டின்......''

உள்ளே செல்லத்தின் குரல் உரக்கக் கேட்டது : ''நானும் இரண்டு நாட்களாக முட்டிக் கொண்டிருக்கிறேன், 'காப்பிக் கொட்டை வாங்கணும்' என்று. யாராவது காதில் போட்டுக் கொண்டால்தானே ? ஒருத்தர் சட்டப் புத்தகமே சரணாகதின்னு அடைஞ்சு கிடக்கிறார். இன்னொருத்தன் ' நாடகம், நாடகம்' என்று கூத்தடிக்கிறான். இந்த லட்சணத்தில் வரவங்க போறவங்க எல்லோருக்கும் எப்படியாவது நான் காப்பி போட்டுக் கொடுத்தாக வேண்டும் ! நான் என்ன மந்திரக்கோல் வைச்சுக்கிட்டிருக்கேனா, இல்லே, குழாயைத் திறந்தால் காப்பியா கொட்டுமா?''

பவானி கலவரம் அடைந்தவளாக, ''நோ, நோ ! எனக்கு ஒன்றுமே வேண்டாம் ஸார்!'' என்றாள்.

''காப்பி வேண்டாம். மோர் ? சாத்தீர்த்தம் ? தண்ணீர் ?''

''எதுவும் வேண்டாம். நான் இப்பத்தான் நம்முடைய சங்கத்தில் டிபன், காப்பி சாப்பிட்டுவிட்டு வந்தேன்.''

'' நாடக ஒத்திகை நடக்கிறதோ இல்லையோ, டிபன் காப்பியை எல்லாரும் கச்சிதமாக முடித்துக் கொள்வீர்கள் போலிருக்கு.''

''நேற்று வரை ஒத்திகை சரியாகத்தான் சார் நடந்தது. இன்றுதான் தகராறுவிட்டது. நானும் கிளம்பி வந்துவிட்டேன்.''

''ஏன் என்ன விஷயம் ?''

''கல்யாண விஷயம்தான்.''

'' என்ன பண்ணினான் அவன்? வர வர அவன் போக்கே எனக்குப் பிடிக்கவில்லை. ரொம்ப அதிகப்பிரசங்கியாக இருக்கிறான். பாருங்க, 'ஏண்டா, நாடகத்தில் எனக்கு ஒரு சான்ஸ் தர வேண்டாமா' என்றால் சிரிக்கிறான். எனக்கு நடிக்கத் தெரியாதாம். நீங்க பார்க்கிறீங்களா ? ஹாம்லெட்.....:. 'டு பீ ஆர் நாட் டு பீ'....ன்னு நான் ஆரம்பிச்சா....... ''

''அடடா ! நான் உங்க மகன் கல்யாணத்தைக் குறிப்பிடவில்லை. அவர் 'அக்கிரமக் கல்யாணம்' என்று கருதுகிற ஒரு திருமணத்தைப் பற்றிப் பேச வந்தேன்.''

''அதென்ன புது மாதிரி கல்யாணம் ? வைதிகக் கல்யாணம், சீர்திருத்தக் கல்யாணம் என்றெல்லாம்தான் உண்டு. அக்கிரமக் கல்யாணம் என்று புதிதாக ஒன்று முளைத்திருக்கிறதா ?''

'' ஸார் ! வேடிக்கைக்கு இது நேரமில்லை. ரங்கநாத முதலியார் உங்க 'கிளையண்ட்' தானே ? அதனால் உங்களிடம் பேசிவிட்டுப் போவது நல்லது என்று நினைத்தேன். அவர் கமலாவை மணந்துகொள்ளப் போகிறார். நாளைக்குத் திருநீர்மலையில் யாரும் அறியாமல் தாலி கட்டிவிட ஏற்பாடு. ஆனால் இந்த விஷயம் உங்கள் பிள்ளைக்குத் தெரிந்துவிட்டது. தமது நண்பர்களோடு பெருங்கூட்டமாகப் பஸ்ஸில் புறப்பட்டுப் போய்க் கல்யா

ணத்தை நிறுத்திவிடத் தீர்மானித்திருக்கிறார்.''

'' நிறுத்திவிட்டுப் போகட்டுமே, உங்களுக்கு அதனால் என்ன நஷ்டம் ?''

'' ரங்கநாதனுக்கு நீங்கள்தானே வக்கீல்?''

''ஆமாம், அதனால் அவர் செய்கிற அக்கிரமத்துக்கெல்லாம் பக்கபலமாக நிற்க வேண்டுமா ?''

''நான் அப்படிச் சொல்லவில்லே.''

''மிஸ் பவானி, உங்களுக்குக் கமலா மீது என்ன கோபம்? அவள் அந்தக் கிழவருக்கு வாழ்க்கைப்பட்டுவிட வேண்டும் என்பதில் உங்களுக்கு என்ன அவ்வளவு அக்கறை ?''

''நீங்கள் என்னைத் தவருகப் புரிந்துகொண்டிருக்கிறீர்கள். கமலாவின் உள்ளம் எனக்கு நன்ருகத் தெரியும். அவளிடம் எனக்குள்ள அக்கறையால்தான் நான் வாதாடுகிறேன். அவள் முழுச் சம்மதத்துடன் இந்தத் திருமணம் நடக்கிறது என்றே நான் நம்புகிறேன். அப்படியாளுல் இவர்கள் போய்க் கல்யாணத்தை நிறுத்த என்ன உரிமை பெற்றிருக்கிருர்கள் ? மேலும் ரங்கநாதமுதலியாரின் வக்கீல் என்ற முறையில் அவருக்கு மணப் பந்தலில் நேரக்கூடிய அவமானத்தை நீங்கள் எண்ணிப் பார்ப்பீர்கள் என்று நினைத்தேன். ஆனல் நீங்களோ என் நோக்கத்தையே சந்தேகிக்கிறீர்கள்.''

''கல்யாணம் வரட்டும். விசாரிக்கிறேன்'' என்ருர் கோபால கிருஷ்ணன். ''உங்களுக்குப் பழமொழி தெரியும் இல்லேயா ? 'குரைக்கும் நாய் கடிக்காது' என்று. இவர்கள் வாய்ச் சொல் வீரர்கள்.''

''அப்படித் தோன்றவில்லே. தீவிரமாய் இருக்கிருர்கள். இவர்கள் ரத்தம் கொதிக்கிறதாம்.''

''அடடா ! அது ஆபத்தாயிற்றே! ஆற வைத்துவிட வேண்டியதுதான்.''

''ஆருதாம்! இவர்கள் உடலில் ஓடுவது தமிழ் ரத்தமாம் !''

''அடேடே ! அப்படியாளுல் மற்றவர் உடம்பில் ஓடுவது இங்கிலீஷ் ரத்தமோ ?''

''இன்று மாலேயே அவர்கள் பஸ்ஸில் புறப்படுகிருர்கள். விடிவதற்குமுன் திருநீர்மலே போய்ச் சேர்ந்துவிட உத்தேசம்.''

'' நானும் போகிறேன். பின்னேடு.''

''அவர்கள் கல்யாணத்தைத் தாலி கட்டும் சமயத்தில் நிறுத்திவிடப் போவதாகச் சொல்லிக் கொள்ள மாட்டார்கள். ஊரில் இரண்டாம் பேர் அறியாமல் திருமணத்தை முடித்துக் கொள்ளத் தீர்மானித்த ரங்கநாதனே வியப்பில் ஆழ்த்தவே போவதாகப் பாவனே செய்வார்கள். போய், 'அத்தனே பேருக்கும் கல்யாண விருந்து ஏற்பாடு செய்தால்தான் ஆச்சு' என்று பிடிவாதம் பிடிக்கப் போவதாகச் சொல்வார்கள்.''

'' நியாயம்தானே ! அவருடைய வக்கீலான எனக்கே விஷயம் தெரிவிக்கவில்லேயே அவர். நானும் இவர்களோடு போய் நிற்கத்தான் போகிறேன். தாலி கட்டி முடிந்த பிறகு இரண்டு தொன்னே பாயசமாவது உறிஞ்சிக் குடிக்காமல் ஊர் திரும்பப் போவதில்லே.''

பவானி புன்னகையுடன், ''பெஸ்ட் ஆஃப் லக், நான் வரட்டுமா ?'' என்ருள்.

''சீக்கிரம் கிளம்புங்கள். கல்யாணம் வரும்போது நீங்கள் இங்கிருப்பது நல்லதில்லே.''

பவானி வாசலுக்கு வந்தபோது உள்ளே செல்லத்தின் குரல் பெரிதாக ஒலித்தது :

''அந்த ராங்கிக்காரி மினுக்கிக் கொண்டு வந்து நம்ம குழந்தையைப் பற்றி என்னென்னமோ பழி சுமத்திட்டுப் போருு. நீங்களும் பல்லே இளிச்சுக்கிட்டுக் கேட்டுக்கிட்டிருக்கீங்களே !''

''இந்தா, வாயை மூடு !'' என்று அவளுக்கும் மேலே குரலே உயர்த்தி அதட்டினுர் கோபாலகிருஷ்ணன். ''உன் பிள்ளைக்கு ஏகமாய்ச் செல்லம் கொடுக்கப் போக இப்போ அவன், நான் வெளியே தலேகாட்டவே முடியாதபடி செய்துவிடுவான் போலிருக்கு. இங்கே பவானி வந்து போனதைப் பற்றி நீ மூச்சு விடப்படாது. மீறி வாயைத் திறந்தே உன்னேத் தள்ளி வைச்சுட்டு அந்தப் பவானியையே இரண்டாம்தாரமாய்க் கல்யாணம் செய்து கொண்டுவிடுவேன் ! தெரிந்ததா ? உம் !''

பவானி காரியசித்தியாகிவிடும் என்ற நம்பிக்கையுடன் காரில் ஏறினுள். 'இப்பத்தான் உண்மையான ஹோம்ரூல் – வீட்டை ஆளும்– கோபாலகிருஷ்ணன்!' என்று அவள் வாய் முணுமுணுத்தது.

## அத்தியாயம் 40

# எதிர்த் தந்திரம்!

**ரா**மப்பட்டணத்திலிருந்து பஸ் புழுதியைக் கிளப்பிக்கொண்டு புறப்பட்டது. ஆனல் கிளம்பியவேகத்தில் அதனுல்வெகுதூரம்போய் விட முடியவில்லே. ஊர் எல்லேயைத் தாண்டியதுமே உள்ள குறுகிய பாலத்தைக் கடக்க முடியாமல் நின்றுவிட்டது. காரணம் பாலத்தில் ஒரு மாட்டு வண்டி மையத்தில் நின்றிருந்ததுதான். அதிலிருந்து கோபாலகிருஷ்ணன் ஒரு பெட்டி, கூஜா சகிதம் இறங்கினுர்.

பஸ்ஸைநோக்கி நடந்து வந்துஅதில் ஏறியபடியே, ''என்னே ஏமாற்றிவிட்டுப் புறப்படலாம் என்று பார்த்தீர்களா? அதெல்லாம் இந்த ஹோம்ரூல் கோபால கிருஷ்ணனிடம் பலிக்காது. தம்பிங்களா!'' என்ருர்.

அப்புறம் ஜன்னல் வழியாகத் தலேயை நீட்டி, ''ஆறுமுகம் ! வண்டியை வீட்டுக்குத் திருப்பி ஓட்டுடா! பஸ் போகட்டும்!'' என்று உரக்கக் கத்தினுர். ''அம்மாவிடம் கல்யாணமும் நானும் இன்னும் இரண்டு நாட்களில் திரும்பி விடுவோம்னு சொல்லு.... துணேக்கு வேணும்னு மதுரவல்லி வீட்டோடு வந்து இருக்கட்டும்.''



''சரிங்க'' என்றான் ஆறுமுகம். பஸ் தொலைவில் வருவதைப் பார்த்துவிட்டுப் பாலத்தை அடைத்துச் சற்றுமுன் வண்டியை நிறுத்தியவன், இப்போது பஸ்ஸுக்கு வழி விட்டு 'ஜல் ஜல்' என்று சதங்கை ஒலிக்கச் சென்றான்.

'' போகட்டும், போகட்டும்! ரைட்!'' என்றார் கோபாலகிருஷ்ணன். பஸ் மீண்டும் நகரத் தொடங்கியதும், ''ஏண்டா, கல்யாணம்! நல்ல பிள்ளைக்கு அடையாளமா சொல்லிக்காமல் கிளம்பி விட்டாயாக்கும்'' என்றார்.

'' எப்படிப்பா, உங்களுக்கு விஷயம் தெரிஞ்சுது?''

''நீதான் சங்கத்தின் காண்மன் பையனை உன் அம்மாவிடம் ரகசியமா அனுப்பி வைச்சியே? அவன் உன் அம்மாவின் உருட்டல், மிரட்டல் பேச்சு காதில் விழுந்தவுடனே அவள் தான் வீட்டு எஜமானனாக இருக்க வேண்டும் என்று தீர்மானித்து உன் உத்தரவுப்படி எஜமானியம்மாளைத் தேடி நேரே என்னிடம் வந்துவிட்டான்! ஒரு பெட்டியிலே உனக்கு இரண்டு சட்டை வேஷ்டி வைத்துக் கொடுக்குமாறு கேட்டான். 'எதுக்குடா' என்றேன்.''

''உடனே எல்லாவற்றையும் உளறிக் கொட்டி விட்டானா?'' என்று கல்யாணம் பதற்றமும் கோபமுமாகக் கேட்டான்.

''பின்னே? ஹோம்ஸ் கோபாலகிருஷ்ணனின் குறுக்கு விசாரணையில் யாராவது தப்ப முடியுமா, என்ன? அவன் காப்பி ஆற்றிக் கொடுத்துக் கொண்டிருந்த போதுதான் நீங்க உங்க திட்டத்தை உருவாக்கினீங்களாம்!''

'' என்னப்பா, சொன்னான்?''

'' நீங்க இப்போ செய்து கொண்டிருக்கும் காரியத்தைத்தான் விவரித்தான். 'திருநீர்மலையில் ரங்கநாத முதலியார் யாருக்கும் தெரியாமல் திருமணம் செய்து கொள்ள உத்தேசித்திருக்கிறார். ஆனால் கல்யாணசாருக்கு எப்படியோ விஷயம் அம்பலமாகி விட்டது. நண்பர்களோடு போய் அவரை அதிசயத்தில் ஆழ்த்தப் போகிறார்' என்றான்.''

''அவ்வளவுதானா, அப்பா?''

'' இவ்வளவு போதாதா? இன்னும் என்ன? ரங்கநாத முதலியார் என் ஆப்த நண்பர். அவருக்கு நான்தான் வக்கீல். அப்படியிருந்தும் அவர்தான் எனக்கு விஷயத்தைத் தெரிவிக்காமல் ஏமாற்றினார் என்றால் நீயுமா அப்பாவுக்குத் தெரியாமல் கம்பி நீட்டப் பார்க்கணும்?''

நிம்மதிப் பெருமூச்சு விட்டான் கல்யாணம். ''அதற்கில்லை, அப்பா! உங்க நன்மையை உத்தேசித்துத்தான் நான் கூறவில்லை. உங்களுக்கு விஷயம் தெரியவந்தால் வராமலிருக்க உங்க மனசு கேட்காது. ஆனால் பஸ் பயணம் சிரமம். உட்கார்ந்தபடியே போகணும். அதுவும் இரவு நேரம். கண் விழித்தால் உடம்புக்கு ஆகுமா?''

'' உன் கரிசனம் கிடக்கட்டும், கல்யாணம். சரீரத்துக்காகப் பார்த்துச் சிநேகத்தை விட்டு விட முடியுமா? எத்தனை வருஷப் பழக்கம் எனக்கும் ரங்கநாதனுக்கும்!''

'' நீங்க வந்ததே நல்லதாப் போச்சப்பா'' என்றான் கல்யாணம், ஈனஸ்வரத்தில்.

''ஆமாம். எல்லோருமே திடும்மென்று போய் நிற்கிறோம். அதனால் மத்தியானச் சாப்பாடு எப்படியானாலும் இரவு விருந்து பிரமாதமாய் அமையணும்னு போனதுமே சொல்லிவிடலாம். லட்டு மலை, பாதாம்கீர் ஆறு, சாம்பார் சமுத்திரம்! கல்யாணம் உனக்குப் பாதாம்கீர் ரொம்பப் பிடிக்குமே!'' என்று கூறிச் சிரித்தார் கோபாலகிருஷ்ணன்.

கல்யாணத்துக்கு அப்போதே விளக்கெண்ணெயை விழுங்கியது போலிருந்தது. அவன் நண்பர்கள் யாரும் பேசவில்லை. என்ன செய்வது? எப்படி நடந்து கொள்வது என்பதொன்றும் புரியாமல் யோசித்துக் களைத்துப் போய் உட்கார்ந்தபடியே தூங்க ஆரம்பித்தார்கள். சிறிது நேரத்துக்குப் பிறகு, கோபாலகிருஷ்ணன் தலையும் ஆடி விழ ஆரம்பித்தது. மனம் பதைக்கக்








○ வேட்டைக்குப் போன மகாராஜா ஓடி வந்து கேட்டார்: "மந்திரி, சேனாதிபதி, வீரர்கள் எல்லோரும் இருக்கிறார்களா?"

"இருக்கிறார்கள், மகாராஜா!" என்று பதில் வந்ததும் மகாராஜா மகிழ்ச்சியுடன் சொன்னார்: "அப்பாடா! அப்படியானால் நான் சுட்டது புலியைத்தான்!"

○ அலறி அடித்துக் கொண்டு ஓடி வந்த ஒருவன் பின்னால் துரத்திக் கொண்டு வந்த சிறுத்தையைக் காண்பித்துக் கேட்டான் :

"சிறுத்தைக்கு மரம் ஏறத் தெரியுமா ?"

"தெரியும்."

"நல்ல வேளை, பிழைத்தேன்."

"ஏன் ?"

"எனக்கு ஏறத் தெரியாது !"

○ "நாங்கள் 'ஜீப்'பில் ஒரு காட்டினுள் போய்க் கொண்டிருக்கும்போது ஒரு சிறுத்தை வழியில் எதிர்ப்பட்டுக் கையை உயர்த்தி 'லிஃப்ட்' கேட்டது. தெரியுமா ?"

"இதை நான் நம்ப மாட்டேன்."

"ஏன் ?"

"சிறுத்தைக்குத்தான் கைகள் கிடையாதே !"

○ வேட்டைக்குப் போய்வந்த கணவன் மனைவியிடம் சொன்னான்: "துப்பாக்கியில் இருந்த மூன்று குண்டுகளில் இரண்டை மிருகங்களின் மேல் பிரயோகித்தாகிவிட்டது. மூன்றாவது வீணாவதை நான் விரும்பவில்லை. எங்கே தவழ்ந்து வா, பார்க்கலாம்!"

- கே. வி. முரளி



---

கண் விழித்து அமர்ந்திருந்தவன் கல்யாணம் ஒருவன்தான். நண்பர்கள் எல்லோருடைய முன்னிலையிலும் தான் ஒரு கையாலாகாதவனாக அவமானப்பட்டு நிற்பது போல் உணர்ந்தான். 'நினைத்த காரியம் என்ன? நடப்பது என்ன? அப்பாவைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு கல்யாணத்தைநிறுத்துவது எப்படிச் சாத்தியம்? அவர் அதட்டலுக்கு எல்லோரும் அடங்கிப் போய் விட வேண்டியதுதான். யாருக்குமே தைரியம் வராது! அப்புறம் அப்பாவே குறிப்பிட்டது போல் 'லட்டு மலைக்கும், பாதாம்கீர்ஆறுக்காகவுமே ஆசைப் பட்டு இந்த இளைஞர் பட்டாளம் கல்யாணத்துக்குச் சென்றதாகும். பின்னால் இந்தத் தோல்வியைச் சுட்டிக் காட்டி நண்பர்கள் என்னைக் கிண்டல் செய்யும்போது அதை எப்படிப் பொறுத்துக் கொள்வது? அதுதான் போகட்டும், அத்தனை தூரம் மார் தட்டிப் பேசிவிட்டு வந்தாயே, பவானியிடம்! அவள் முகத்தில் இனி எப்படி விழிப்பது?' நினைக்க நினைக்கக் கல்யாணத்தின் மனம் பதறியது.

மூன்று மணி நேரப் பயணத்துக்குப் பிறகு ஒரு சின்ன ஊரில் பஸ் நின்றது. டிரைவரும் கண்டக்டரும் டீ சாப்பிட்டு வர இறங்கினார்கள். கல்யாணம் பஸ்ஸுக்குள் நோட்டம் விட்டான். கோபாலகிருஷ்ண முதலியார் குறட்டை விட்டுக் கொண்டிருந்தார். கல்யாணம் பஸ்ஸை விட்டு இறங்கி டிரைவர், கண்டக்டரைப் பின்தொடர்ந்தபோது அவனுடன் அவன் நண்பர்கள் இருவர் மட்டுமே வந்தார்கள். மற்றவர்கள் அரைத் தூக்கத்திலோ ஆழ்ந்த உறக்கத்திலோ இருந்தனர்.

டீ அருந்திக் கொண்டிருந்த டிரைவர், கண்டக்டரைத் தனியே அழைத்தான் கல்யாணம். அவர்களிடம் அந்தரங்கமாகச் சில வார்த்தைகள் பேசினான். இரு பத்து ரூபாய் நோட்டுக்களை எடுத்து இருவர் பாக்கெட்டிலும் மடித்துச் செருகினான். பஸ்ஸுக்கு அனைவரும் திரும்பிய பின்னர் இளைஞர்களிடையே சங்கிலித் தொடர்போல் ஒரு செய்தி அந்தரங்கமாகப் பரவியது.

திருநீர்மலையை அடைய இன்னும் பதினைந்து மைல் தூரம் இருக்கும்போது பஸ் 'திடும்'மென்று நின்று விட்டது. டிரைவர் கிளப்பிக் கிளப்பிப் பார்த்தார். ஊஹூம்! அவர் ஜம்பம் சாயவில்லை.

"எல்லோரும் கொஞ்சம் கீழே இறங்கித் தள்ளறீங்களா?" என்றார் திரும்பிப் பார்த்து.

"அப்பா! நீங்கள் இறங்க வேண்டாம். நாங்க வாலிபர்கள் இறங்கித் தள்ளுகிறோம்" என்றான் கல்யாணம்.

"அழகுதான்! எனக்கு அப்படி என்ன வயசாகி விட்டது? நானும் ஒரு கை கொடுக்கிறேன்" என்று கொட்டாவி விட்டுக் கொண்டே இறங்கினார் கோபாலகிருஷ்ணன்.

எல்லோரும் பஸ்ஸைத் தள்ளினார்கள். பஸ் புறப்பட்டது. நகர்ந்தது! "ஸ்டாப்! ஸ்டாப்!" என்று கத்திக் கொண்டே இளைஞர்கள் அதன் பின்னால் ஓடினார்கள். பஸ் நகர்ந்து கொண்டிருக்கும்போதே அதில் தொத்திக் கொண்டு ஏறினார்கள். பஸ் நிற்கவே யில்லை. வாலிபர்கள் ஓடி வந்து ஏறிக் கொள்ளும் வேகத்தில் நகர்ந்து கொண்டே யிருந்தது. "அப்பா! சீக்கிரம் வாங்க! சீக்கிரம்!" என்று கூறியபடி கல்யாணமும் ஓடினான். பஸ்ஸில் பாய்ந்து ஏறிக் கொண்டான்.

கோபாலகிருஷ்ண முதலியார் பத்தடி ஓடினார். அதற்கு மேல் அவரால் முடியவில்லை; இரைத்தது. "ஹோல்டான்! ஹோல்டான்!" என்று கத்தினார். பஸ் டிரைவர் அவர் கூச்சலை லட்சியம் செய்யாமல் வேகத்தை அதிகரித்தார். வாலிபர்கள் அனைவரும் பஸ்ஸில் இருந்தார்கள். வயோதிகர் மட்டும் வீதியில் நின்றார்!

(தொடரும்)



கொஞ்சம் கற்பனை செய்து பாருங்கள்! ஒவ்வொரு முறையும் நீங்கள் சுவேகா மோபெடில், வேலைக்கோ, கல்லூரிக்கோ, அல்லது வேறு எங்காயினும் சவாரி செய்கையில் செலவழிப்பது, நீங்கள் பஸ் சவாரி செய்திருந்தால் அதற்கு கொடுப்பதைக் காட்டிலும் குறைவே!

இந்த "சுவேகா மோபெட்" ஒரே ஒரு லிட்டரில் 60 கிலோ மீட்டர்கள் உங்களைக் கொண்டு செல்கிறது. அதையும் விட, நீங்கள் உங்கள் நேரத்தை முடிவற்ற வரிசையில் விரயம் செய்யவேண்டாம்; அல்லது நிரம்பி வழியும் ஜனக்கூட்டத்தில், பஸ்ஸில் மூச்சுத்திணறவேண்டாம்; அல்லது வாடகைக் காருக்காகச் செலவிடும் போது கஷ்டப்பட வேண்டாம்! ஆமாம்! உங்களது சுகமான சவாரிக்கெனவே சிறப்பான முறையில் உருவாக்கப்பட்டுள்ளது. அதனுடைய மிக உறுதி வாய்ந்த வடிவமைப்பு செயின்-இயக்கம், சுவேகா மோபெடின் வேகத்திற்கும், சாலையில் நல்ல பிடிப்பிற்கும் ஏற்றதாக அமைந்துள்ளது.

இதைவிட வேறென்ன வேண்டும்? மோபெட் வகைகளிலேயே சுவேகா ஒன்றுதான் வலுவான குரோமியம் செய்யப்பட்ட அலுமினியச்சிலிண்டர்களைக் கொண்டுள்ளது. அவைகள் தொடர்ந்து சீராக இயங்கிக் கொண்டிருப்பதில் ஆச்சரியமில்லை.

ஆம்! வாழ்க்கையில் சில தரம் மிகுந்த பொருட்கள் மலிவாகவுமிருக்கின்றன!

இரண்டு அழகிய மாடல்கள். கண்ணைக் கவரும் வண்ணத்தொகுப்பு.

மோபெட்ஸ் இந்தியா லிமிடெட்,
திருப்பதி, ஆந்திரப் பிரதேசம்.

# டாக்ஸியில் செல்வது போல் அதன் பயணம். செலவிடும் பணமோ பஸ்ஸில் செல்வதைவிடக் குறைவு!



SAA/MIP/1654

**Suvega**

சுவேகா — இந்தியாவில் மிக அதிகமாகத்
தேவைப்படும் மோபெட்

மெஸர்ஸ் மோபட்ஸ் இந்தியா லிமிடெட், நெ. 1. V. பழனிசாமி நாயுடு தெரு, அவிநாசி ரோடு, கோயமுத்தூர்-18 ○ மெஸர்ஸ் லக்ஷ்மி ஏஜன்ஸீஸ், தபால் பெட்டி எண் 73, 2.C/3, புரோமெனேட் ரோடு, கண்டோன்மெண்ட் திருச்சி-620001 ○ லக்ஷ்மி ஏஜன்ஸீஸ், 174-E, வடக்கு வெளி வீதி, மதுரை மெஸர்ஸ் மோபட்ஸ் ஆட்டோமொபைல்ஸ், 14, காந்தி ரோடு, சேலம்-7 ○ மெஸர்ஸ் ஸ்ரீ ராமகிருஷ்ணா என்டர்பிரைஸ, 52, கோயமுத்தூர் ரோடு, பொள்ளாச்சி ○ மெஸர்ஸ் ஸ்ரீ பாலகிருஷ்ணா ஏஜன்ஸீஸ், ராதாகிருஷ்ணன் ஜின்னிங் பேக்டரி, 53, ஸ்ரீ வில்லிபுத்தூர் ரோடு, ராஜபாளையம்-626 117.




# பொடிப் பொடியான விஷயங்கள்!

இருகவரான்

அண்மையில் இந்தியாவில் தயாராகும்பொடியைப்பற்றியும் அதனைப் பயன்படுத்துவோரைப் பற்றியும் ஒரு சர்வே எடுக்கப்பட்டது. ஏறத்தாழ தமிழ்நாட்டில்மட்டும் 2,367 டன் பொடி உற்பத்தியாகிறது என்று அந்தக் கணக்கில் தெரிய வந்துள்ளது.

மற்ற மாநிலங்களின் உற்பத்தி தமிழகம் உற்பத்தியில் ஒரு சிட்டிகையளவுதான்!

மேற்கு வங்கத்தினர் நயம் பொடியை ஆண்டு ஒன்றுக்குத் தமிழகத்திலிருந்து ஆறு டன் வரையில் தருவிக்கிறார்கள். பொன் நிறமுள்ள அசல் பொடி தினசரி டின் டின்னுகச் சென்னையிலிருந்து மேற்கு வங்கத்துக்கு விமானம் மூலம்கூட அனுப்பி வைக்கப்படுகிறது.

இந்தப் பொடிப் பழக்கம் இந்திய நாட்டுக்கு எப்படி வந்தது?

ஐரோப்பிய சுற்றுலாப் பயணி ஒருவர் 1658லிருந்து 1665 வரையில் இந்தியாவில் பயணம் மேற்கொண்டிருந்த நாளில் சில குறிப்புக்களை எழுதியுள்ளார். அவர் பெயர் காப்டர் சௌட்டின்.

எழுதிய குறிப்பு இது:

''கோவாவில் வசிக்கும் போர்த்துக்கீசியப் பெண்கள் வெற்றிலை போடும் பழக்கத்துடன் பொடியும் போட்டுக் கொண்டிருந்தனர். இதற்காக ஒவ்வொரு போர்ச்சுக்கீசியப் பெண்ணும் ஒரு டப்பியை மடியில் வைத்திருந்தாள். அவர்களது அழகிய முகத்தில் உதடுகளிலும் மூக்கிலும் எப்போதும் புகையிலையின் நெடியும், கறையும் இருந்தன!''

போர்ச்சுக்கீசியர் கொண்டு வந்த இந்தப் பொடிப் பழக்கம் அமெரிக்கப் பழங்குடி மக்களால் உலகத்துக்கு வழங்கப்பட்ட ''கொடை'' என்று ஒரு கருத்து வழங்குகிறது. அவர்கள் ஆங்கார தேவதையரின் ஆராதனைக்கு இந்தப் பொடியை நைவேத்தியம் செய்வார்களாம்!

வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பலரும் பொடிப் பிரியர்களாக இருந்திருக்கிறார்கள்.

நெப்போலியன், நாலாம் ஜார்ஜ் மன்னர், மூன்றாம் ஜார்ஜ் மன்னரின் ராணி சார்லோட்டி ஆகியோர் பொடியை மிகவும் ரசனையுடன் போட்டுக் கொண்டிருந்தவர்கள்.

''மூக்குப்பொடி சார்லோட்டி'' என்று மூன்றாம் ஜார்ஜ் மன்னரின் ராணியைக் கேலியாகக்கூட மக்கள் அழைத்து வந்தனராம்!

1941 வாக்கில் பிரிட்டிஷ் மக்கள் சபை உறுப்பினர்களிடையே பொடிப் பழக்கம் மிகுந்து காணப்பட்டது. அதனால் மக்கள் சபை கூடும் மண்டப வாசலில் ஒரு காவல்காரர் பொடி டப்பியை வைத்துக்கொண்டு உறுப்பினர்களுக்கு வழங்குவதற்காகவே நிறுத்தப்பட்டார். காரசாரமான விவாதங்கள் நடக்கும்போது வாதத்தில் சூடேற்ற உறுப்பினர்கள் காரம், மணம் நிறைந்த பொடியை மண்டபத்தை விட்டு மெல்ல வெளியே வந்து உறிஞ்சிவிட்டுப் போவது சகஜமாக இருந்தது.

இலக்கியகர்த்தா சாமுவேல் ஜான்ஸன் தமது கோட்டுப் பைகள் முழுவதிலும் பொடியை நிரப்பி வைப்பது வழக்கமாம். யோசனை செய்யும் நேரத்தில் எந்தப் பையில் கைவிட்டாலும் விரலில் பொடி ஒட்டி வரும்!

உலக அழகியாகத் திகழ்ந்த கவர்ச்சிக் கன்னி மார்க்கரட் தாம்ஸன் பொடி என்றால் உயிரையே விடுகிறவள். அதனால்தான் அவள் உயிர் விட்டபோது அவளது சவப் பெட்டி நிறையப் பொடியைத் தூவினார்கள்.

இந்தியாவிலிருந்து போகும் பொடிக்கு 600 சதவீதம் வரையில் அதை இறக்குமதி செய்யும் நாடுகள் வரி விதிக்கின்றன. எனவே ஏற்றுமதியில் பொடித் தொழில் சூடிகையாக இல்லை.

புகை பிடிப்பதை விடப் பொடி போடுவதில் ஆபத்துக் குறைவு என்று மருத்துவ நிபுணர்கள் கருதுகிறார்கள். மூக்குத் துவாரத்தில் புகை உண்டாக்கும் பகைக்கும்; பொடி உண்டாக்கும் நெடிக்கும் நிறைய வித்தியாசம் உண்டு.

ஒரு சிட்டிகையை உறிஞ்சியதும் உணர்வு நரம்புகள் கிளர்ந்து மூளை சுறுசுறுப்படைந்து விடுகிறது என்று எல்லாப் பொடிப் பிரியர்களும் நம்புகிறார்கள்.

பொடி போடுவோரைப் பார்த்தால் ஒரு சிட்டிகை ஓசிப் பொடி வாங்கலாம் என்ற உணர்வு பொடி போடாதவர்களையும் தூண்டும்.

''ஓசிப் பொடி வாங்கி
நாசியிலே போட்டால்
காசிக்குப் போனாலும்
கருமம் தொலையாது!''

என்று இந்த ஓசிப் பொடிப் பிரியர்களைச் சிலர் பாட்டால் அடிப்பார்கள்.

''மட்டைதனை மடியில் வைத்துப்
பொடி போடுவோர்க்கில்லை என்றால்
மடியினில் உள்ள மட்டை
மாயமாய்ப் போகும்தானே!''

என்று பதிலடி கொடுப்போரும் உண்டு.

சமீப நாட்களில் நாசூக்காகப் பொடி போடுகிறவர் என்று பெயர் எடுத்த பெருந்தலைவர் மேற்கு ஜெர்மனியப் பிரதமர் திரு ஷிமிடிட்!



சஞ்சீவிமலை கீழ்சரகத்தில் உள்ள சிரஞ்சீவி ஆஸ்ரம் டிரஸ்டு தலைமை சுவாமிகள் ஸ்ரீ சித்தராஜ யோகேஸ்வர், அநள வருஷம் 1151 ஆனி மாதம் 31ம் தேதி (14-7-76) புதன்கிழமை அன்று மகாராஜசித்தி அடைந்து விட்டார்கள். அன்று முதல் பக்தர்கள் சிவலிங்கம் பிரதிஷ்டை செய்து தினமும் அபிஷேகம் நடத்தி வருகின்றார்கள், பக்தர்கள் அனைவரும் வந்திருந்து சாயங்காலம் நடந்து வரும் அபிஷேகத்தைத் தரிசித்து ஆசி பெற்றுக் கொள்ளவும்.

மண்டலாபிஷேகம் ஆவணி மாதம் 13ந் தேதி (29-8-76) காலை 11 மணியிலிருந்து 12 மணிவரை நடைபெறும். அனைவரும் வந்திருந்து மஹா அபிஷேகத்தைத் தரிசித்து சுவாமிகளின் ஆசி பெற்றுக்கொள்ளவும்.

**பக்தர்கள் ௪ டிரஸ்டி**



## அதிர்ஷ்டம் அழைக்கிறது

கருத்துள்ள வசனங்கள் நம் கவனத்தை ஈர்த்தாலும், திரைக் கதை வேதனையைத் தருகிறது. வைதிக கர்மாக்களில் மக்களுக்குத் தானாகவே சிரத்தை குறைந்து வரும் இந்நாளில், வைதிகர்கள் மறைந்து வரும் இந்நாளில், ஓர் ஏழை வைதிகப் பிராமணரைக் கதாநாயகராக வைத்து அவரைக் கேலிக்குள்ளாக்கியிருக்க வேண்டாம். பரம ஏழையான பஞ்சு சாஸ்திரி, தம் ஒரே பெண்ணுக்குத் திருமணம் முடிக்கக் குதிரைப் பந்தயத்தில் ஈடுபட்டு, கையில் உள்ளதையும் இழந்து, மனைவி உயிருடன் இருக்கும்போதே அவள் திடீரென்று இறந்து விட்டதாகச் சொல்லிப் பெரிய மனிதர்களிடம் யாசகம் கேட்டு அவலப் பிழைப்பு நடத்தி வரும்போது உண்மையிலேயே மனைவியை இழந்து விடுகிறார்....

பஞ்சு சாஸ்திரியின் பெண் அம்புஜத்தைப் பார்க்கும்போது மனம் நெகிழ்ந்து போகிறது. ஸ்ரீ வித்யா அந்தப் பாத்திரத்துக்குத் தம் அகன்ற விழிகளாலேயே உயிர் கொடுத்து விடுகிறார்.

சௌகார் ஜானகியின் நடிப்பு இப்படத்தின் ஜீவநாடி. மனதுக்கு இதம் தரும் பார்வை; நடை, உடை, பாவனை அனைத்திலும் அமைதியான ஒரு குடும்பப் பாங்கு தெரிகிறது.

பக்கத்து வீட்டு என்ஜினியர் பிள்ளைகள் காதல் விவகாரம் இந்தக் கதையோடு ஒட்டாத தனிக் கதையாக, ஜங்ஷனில் கழற்றி விடப்பட்ட ரயில் வண்டி மாதிரி – நிற்கிறது. என்ஜினியர் தம் மனைவி, அடுத்த வீட்டுப் பெண் அம்புஜம் ஆகியவர்களுடன் ராமேசுவரம் போனதும் அங்கு எதிர்பாராதவிதமாக மனைவியை இழந்ததும், அம்புஜத்தை அவர் மணந்து கொண்டதும் .... ஒரு தனிக் கதை! கதை, வசனம், பாடல்கள்; வாலி. டைரக்ஷன்; ஏ. ஜகந்நாதன்.

தரமான தமிழ்ப் படங்களை என்று அதிர்ஷ்டம் அழைத்து வருமோ தெரியவில்லை!

## முத்தான முத்தல்லவோ

முத்தான தலைப்புக்கு ஏற்ற, சத்தான கதை இல்லையே! என்ன செய்ய! முத்துவிடம் அன்பு பாராட்டிய லக்ஷ்மி, அவன் தம்பி கண்ணனைத்தான் காதலிக்கிறாள். உண்மையாகவே அவளைக் காதலித்த முத்து தம்பிக்காக அவளை விட்டுக் கொடுக்கிறான். கண்ணன் லக்ஷ்மியை மணக்கிறான்.... குடும்பத்தை விட்டு வெளியேறிப் பெரிய இசைமேதையாகிறான். லக்ஷ்மி பல குழப்பங்களை உண்டாக்குகிறாள். சுஜாதாவின் இரட்டை வேடம் அத்தனை குழப்பங்களுக்கும் அநுகூலமாயிருக்கிறது. திரைக்கதை எங்கெல்லாமோ சுற்றி அலைந்துவிட்டுக் கடைசியில் ஓய்ந்து படுத்து விடுகிறது....!

நல்ல பாத்திரங்களை ஏற்று நல்லபடியாக நடித்து வரும் சுஜாதா போய் இப்படியெல்லாம் நடிக்க வேண்டுமா என்ன!

படத்தின் ஓட்டத்தைக் கெடுக்க, குடி, சூதாட்டம், மனைவியின் மேல் சந்தேகம், எல்லாம் வருகிறது. (அதுவும் கண்ணன் தன் அண்ணனையே சந்தேகிக்கிறான்...சே! அசிங்கம்!)

படத்தில் நடிப்புக்கு முதலிடம் பெறுவது ரயில் வண்டி. (எப்பொழுதுமே ரயில் வண்டி எந்தப் படத்திலும் நன்றாக நடிக்கும்!) இந்தப் படத்தில் பரபரப்பும் திகிலும் உண்டாக நடித்துப் படத்துக்கு 'த்ரில்' ஏற்படுத்தியிருப்பது ரயில் வண்டி! ரயிலுக்குச் சரியாக ரொம்ப தூரம் ஓடியிருப்பவர் சுஜாதா— அதுவும் கையில் குழந்தையுடன்! அவருக்குச் சரியாக ஓடியிருப்பவர் ஜெய் கணேஷ். ஆனால் ரயில் வண்டிதான் ஜயிக்கிறது. (இவர்கள் ஓடுவது இருக்கட்டும். படம் தியேட்டரில் ஓட வேண்டுமே! அதை யாரும் கவனித்ததாகத் தெரியவில்லையே!)

பாடல்கள், கதை, வசனம் யாவும் கவிஞர் வாலியினுடையவை. டைரக்ஷன்: விட்டல்.

தமிழ்ப் படங்களின் தரம் உயர வேண்டும் என்று ஒருபுறம் பலர் பேசுகின்றனர். ஆனால் படத் தயாரிப்பாளர்கள் விடாமல் பிடிவாதமாக இம்மாதிரிப் படங்களைத் தயாரித்துக்கொண்டிருந்தால் தரம் எப்படி உயரும்?

—காந்தன்



# பாடுவோம் பாப் மியூசிக்!

8

கதை: தமயந்தி/சாருகேசி

சித்திரம்: ராஜு
















அந்த டிரம் போடற சத்தத்திலே, காது டிரம் கிழிஞ்சு போயிடும் வித்யா.


நான் உங்ககூட விவாதம் பண்ணப் போறதில்லே. மிஸ்டர் அருணுக்கு ஒரு சான்ஸ் தரப் போறேளா இல்லியா?
இல்லே. நிச்சயமாக இல்லே.


பாப் மியூசிக்தான் இன்னைக்கு டாப் மியூசிக். டிக்கட் விக்கக் கேட்கவே வேண்டாம். எங்க காலேஜிலேயே ஆயிரம் டிக்கட் போகும்.
எல்லாம் அரை டிக்கட்டுகளாக வந்து கொட்டம் அடிக்கும், வித்யா, நான் ஆமோதிக்கவில்லே.


நீங்கள் இருக்கிற வித்வான்களை யெல்லாம் விட்டு விட்டு, இந்துஸ்தானி வித்வானைக் கொண்டு வந்தால் எப்படி?
கூட்டம் நிறைய வரும் மை டியர் சேர்.


கூட்டம் எதற்குத்தான் வராது அப்பா!
எப்படியோ, நான் ஹிந்துஸ்தானி பாட்டு என்று தீர்மானம் பண்ணியாச்சு!


இதில் ஏதோ மர்மம் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் ஹிந்துஸ்தானி பாட்டு என்றாலே காதை அடைத்துக் கொண்டு ஓடும் அப்பா, அதைப் போய் சபா ஆண்டு விழாவில் வைப்பாரா? மிஸ்டர் சிங்கம் என்ன சொக்குப் பொடி போட்டார் அப்பாவுக்கு?

தொடரும்

# ரிப்பேருக்காக அதிக செலவு செய்யாதீர்கள்

## தவறாமல் உபயோகியுங்கள், முச்செயல் புரியும்

**3 IN 1**

## த்ரீ-இன்-ஒன் ஆயில்



தையல் மெஷின், சைக்கிள், மின்விசிறி, பூட்டு, கீல் மற்றும் பல்வேறு வீட்டுப் பொருட்களைத் தவறாமல் மசகிட்டு பராமரிக்க வேண்டும். இல்லையேல், அவை துருப்பிடித்து பாழாகிவிடும்; தூசி அடைத்துக்கொள்வதால், தடங்கலின்றி அவை இயங்குவது பாதிக்கப்படும்.

எல்லா எண்ணைகளுமே ஒரே சீராகப் பலன் தருவதில்லை. த்ரீ-இன்-ஒன் ஆயில் தரமுயர்ந்த எண்ணை. அது 3 வழிகளில் செயலாற்றுகிறது.

✓ **மசகிடுகிறது**
—உங்கள் இயந்திரம் தடங்கலின்றி இயங்க உதவுகிறது.

✓ **சுத்தம் செய்கிறது**
—இது பிசுக்கை அகற்ற பிரத்தியேகத் திண்மையுடன் தயாரிக்கப்பட்டிருப்பதால், சீராகப் பரவி, தூசி அடைத்துக் கொள்ளாமல் தடுக்கிறது.

✓ **துருப்பிடிப்பதைத் தடுக்கிறது**
—இந்த எண்ணையில் மட்டுமே அலாதியான, துருவை எதிர்க்கும் பொருள் கலந்துள்ளது.

உங்கள் வீட்டிலுள்ள விலையுயர்ந்த பொருள்களைத் தவறாமல் சரியான மசகெண்ணை இட்டுப் பாதுகாத்திடுங்கள். த்ரீ-இன்-ஒன் ஆயில் உபயோகியுங்கள்.

## த்ரீ-இன்-ஒன் ஆயில்

பாதுகாப்புக்கு—ஓர் இணையற்ற எண்ணை.

Licensed user of T. M. : Geoffrey Manners & Co. Ltd.    GM : T/1/75 A

சிகிச்சை அறைக்கு வெளியே தாழ்வாரத்தில் உட்கார்ந்து நெற்றியின் இரு பக்கங்களிலும் கைகளை வைத்து அழுத்தியவாறு முனகிக் கொண்டிருந்தார் ஒரு முதியவர். டாக்டர் அவரை அழைத்து விசாரித்ததில், வயது அறுபது ஆகிறது. பெயர் ஏழுமலை, ஒரு கோயிலில் காவல்காரர் வேலை என்று தெரிந்தது.

''உங்கள் உடம்புக்கு என்ன?''

''நாளா முடியாத தலைவலி. இரவில் ஜுரம். பசியே இல்லே. அடிக்கடி வயிற்றைக் குமட்டுது. தூக்கம் இல்லே. விடியற்காலே வேளையிலே தலை சுத்தறதுங்க'' என்றார் ஏழுமலை, குனிந்த தலை நிமிராமல்.

''ஏன், தலையை நிமிர்த்தி என்னைப் பார்த்துப் பேசுங்களேன்.''

''வெளிச்சம் கண்ணைக் கூசுதுங்க. அதுனாலேதான் நிமிர்ந்து பார்க்க முடியலிங்க.''

''தலைவலிக்கு ஏதாவது மருந்து சாப்பிட்டீர்களா ?''

''நீலகிரித் தைலம் தடவிப்பேன். தினமும் ஆறு – ஏழு தலைவலி மாத்திரை விழுங்குவேன். கொஞ்சம் வலி குறையும் ஆனால் மறுபடியும் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் வலி வருகிறது. கழுத்துக்குப் பின்புறமும் வலி இருக்கிறது.''

பரிசோதனைக்குப் பின் வலி குறைய அவருக்கு மருந்து கொடுத்து, ''நீலகிரி மற்ற தைலம் தடவ வேண்டாம். காலையில் இட்டிலி சாப்பிடலாம். மத்தியான வேளைக்குச் சைவச் சாப்பாடு சாப்பிடுங்க. எக்ஸ்ரே படம் எடுக்க எழுதிக் கொடுக்கிறேன். படம் பார்த்து, விவரம் தெரிவித்துக் தகுந்த மருந்து தருகிறேன்'' என்றேன்.

**''அவருக்கு என்ன நோய் டாக்டர்?''**

''மெனிஞ்சைடிஸ் நோயினால் மூளைப் பகுதி பாதிக்கப்பட்டது தலைவலிக்குக் காரணம். மூளையின் வெளிப்புறத்தில் மெல்லிய ஜவ்வுகள் உள்ளன. இரண்டு ஜவ்வுகளின் மத்தியில் *Cerebro Spinal Fluid* எனப்படும் மூளை நீர் இருக்கிறது. இது மூளையின் உட்புறமும் பரவுகின்றது.''

**''சி. எஸ். எஃப் இரவத்தைப் பரிசோதிப்பது உண்டா?''**

''ஆம்! சி. எஸ். எஃப் திரவம் மூளையின் நோயைக் கண்ணாடி போல் பிரதிபலிக்கின்றது. பெரும்பாலும் முதுகுத் தண்டின் வழியாக எடுத்துப் பரிசோதிக்கிறோம். அது வெளிப்படும் வேகம், அதன் நிறம், அதில் புரதம், சர்க்கரை, உப்பு இவற்றின் அளவு, செல் அணுக்களின் எண்ணிக்கை, கிருமிகளின் தோற்றம் இவை மாறுபட்டு இருக்கும். டி. பி. கிருமிகள், வைரஸ் கிருமிகள் பாக்டீரியா முதலியன மெனிஞ்சைடிஸ் நோய்க்குக் காரணமாக உள்ளன.''

**''எக்ஸ்ரே மூலம் என்ன தெரிந்து கொள்ளலாம்?''**

''நுரையீரல் பகுதியை எக்ஸ்ரே எடுப்பதன் மூலம் இதற்குமுன் அவருக்கு டி. பி. வியாதி இருந்தால் தெரிந்து கொள்ள முடியும்.''

**''டி. பி மெனிஞ்சைடிஸ் ஆக இருந்தால் என்ன சிகிச்சை?''**

''ஸ்ட்ரெப்டோமைசின் ஒரு மாதத்துக்கும், ஐ. என். எச். மாத்திரைகள், பி. ஏ. எஸ். மாத்திரைகள் ஒரு வருடத்துக்கும் தேவைப்படுகின்றன.''

**''இந்நோயை மருந்தினால் முழுவதும் குணமாக்க முடியுமா?''**

''நோய் கண்டவுடனேயே கவனித்துச் சிகிச்சை செய்தால் முழுவதும் குணப்படுத்தலாம். டாக்டரிடம் செல்வதைவிட்டுத் தலைவலிக்கு நீலகிரித் தைலம் தேய்த்தால் இரு நாட்களுக்குப் பிறகு நிலைமை மோசமாகும். தலைவலி அதிகமாகும். குழந்தைகளுக்குக் கூட இந்த நோய் வருவதுண்டு.''

**''இந்நோய் கண்டவர்களுக்கு என்ன உணவு கொடுக்கலாம்?''**

''புஷ்டியுள்ள உணவு தேவை. கோதுமை, பால், சோளம், கார அரிசி, காரட், பழ வகைகள், சிறிதளவு பாதாம் இவை நல்லது.''

**''இந்நோய் வராமல் தடுக்க வழி?''**

''சிறு வயதிலிருந்தே நோய் எதிர்ப்புச் சக்தியை உடலில் வளர்த்துக் கொள்வதுதான். சின்னக் குழந்தைக்கு 'ஏ', 'டி' வைட்டமின்கள் நல்லது. நோய் எதிர்ப்புச் சக்தி வளரும். தினமும் ஒரு காரட் கொடுப்பது மிகச் சிறந்தது. A Carrot a day keeps the drugs away.

**டாக்டர் எஸ். சிவசாமி கூறக் கேட்டு எழுதியவர்: ஆர். பி. ம.**



# மென்மையான பெண்மைக்குத் தரமான

# ஹெலனா

## விஸ்கோஸ் இணைந்த சானிடரி டவல்கள்




மாதத்தில் 30 நாட்களும் நீங்கள் அசதியை உணராமல் சுறுசுறுப்பாக இயங்க ஹெலனா உதவுகிறது. பட்டுப் போன்ற மிருதுவான மென்மையுடன், மிகவும் உன்னதமாகத் தயாரிக்கப்பட்ட சானிடரி டவல் ஹெலனா. மிகவும் நியாயமான விலையில், அன்னியோன்யமான பாதுகாப்பை அளிப்பது.

ஈரத்தை ஊடுருவ விடாது தடுக்கும் ஒரு விசேஷ, இளஞ்சிவப்பு வண்ணப் பரப்புடன் கூடியது. பாதுகாப்பு அளிப்பது. வசதி மிகுந்தது. விலையோ மிகவும் மலிவு. எல்லா கடைகளிலும் கிடைக்கும்.

பூரண விநியோகஸ்தர்கள்:
பாரி அண்ட் கம்பெனி லிமிடெட்
தபால் பெட்டி எண் 12, சென்னை-600 001.

Criterion SI 3353 TM

# வட்ட மேஜை

☐ கல்கி 8–8–76 இதழில் வாசகர் ஒருவர் எழுதியிருந்த கடிதத்தைக் கண்டேன். நோபல் பரிசுகளைப் பெற்ற ரஷ்ய எழுத்தாளர்களான சோல்செனித்சின், பாஸ்டர்நாக் ஆகியோர் தமது கருத்துக்களை வெளியிட சோவியத் நாட்டில் அனுமதிக்கப்படவில்லை என்று அந்த வாசகர் எழுதியிருந்தார்.

நோபல் பரிசுகள் பல சமயங்களில் அரசியல் நோக்கோடு, சோவியத் நாட்டுக்கும் சோஷலிஸத்துக்கும் விரோதமான ஆசிரியர்களுக்கு வழங்கப்பட்டுள்ளன.

சோவியத் நாட்டில் அரசையும் அரசின் கொள்கைகளையும் நடவடிக்கைகளையும் விமரிசிக்கவும் குறை கூறவும் அந்நாட்டு மக்களைப் போலவே அந்நாட்டு எழுத்தாளர்களுக்கும் உரிமை உண்டு. அத்தகைய நூல்கள் பல அங்கு வெளிவந்துள்ளன. மேலை உலகம் ஒரு காலத்தில் மிகவும் பெரிதுபடுத்திய 'ரொட்டியினால் மட்டும் மனிதன் வாழ்வதில்லை' (Not by bread alone), உலகறிந்த சோவியத் எழுத்தாளர் இலியா இரென்பர்க் எழுதிய 'பனி உருகுகிறது' (Thaw) போன்ற நூல்கள் அங்கு வெளியிடப்பட்டதே இதற்கு




உதாரணங்களாகும். விவாதத்துக்குரிய நூல்களை எழுதிய சோவியத் எழுத்தாளர்களின் பட்டியலையே நான் தர முடியும்.

என்றாலும், சோவியத் நாட்டில் தேசத் துரோகமான கருத்துக்களையோ, பல போராட்டங்களையும் தியாகங்களையும் புரிந்து அந்நாட்டு மக்கள் அடைந்துள்ள நன்மைகளையும் அவர்களது லட்சியங்களையும் இழித்தும் பழித்தும் எதிர்த்தும் பேசும் கருத்துக்களையோ கொண்ட நூல்கள் அனுமதிக்கப்படுவதில்லை. சோல்செனித்சினின் நூல்களும் சோவியத் நாட்டில் வெளிவந்ததுண்டு. சோவியத் நாட்டில் நிகழ்ந்துவிட்ட சில அசம்பாவிதங்களைச் சுட்டிக் காட்டி அவர் எழுதிய 'டெனிசோவிச்சின் வாழ்வில் ஒரு நாள்' என்ற நூல் அங்கு வெளியிடப்பட்டது. அந்த நாவல் ''சோவியத் லிட்டரேச்சர்'' என்ற ஆங்கில சஞ்சிகையிலும் வெளிவந்தது. அவர் சோஷலிஸ சமுதாயத்தில் தென்பட்ட குறைபாடுகளை விமரிசிப்பதோடு நில்லாது, சோஷலிச லட்சியத்தையும், வாழ்க்கை முறையையுமே குறை கூறியதோடு, சோவியத் நாட்டுக்கு விரோதமாகச் செயல்பட்ட தேசத் துரோகிகளைத் தேசபக்தர்களென்றும், மாவீரர்கள் என்றும் புகழும் அளவுக்குப் போய்விட்டார் என்பதையே அவரது பிற்கால நூல்கள் எனக்குத் தெளிவுபடுத்தின. இத்தகைய போக்கிலிருந்து தம்மைத் திருத்திக்கொள்ள மறுத்த காரணத்தினாலேயே, எழுத்தாளர் சங்கத்திலிருந்தும் இறுதியில் நாட்டிலிருந்துமே வெளியேற்ற வேண்டிய நிலைமையை அவர் தமக்குத் தாமே உருவாக்கிக் கொண்டுவிட்டார். 'ரஷ்யனாகப் பிறப்பதே ஒரு துர்ப்பாக்கியம்', '1917ல் ரஷ்யாவில் புரட்சி வெற்றி பெற்றது சரித்திரத்தில் நேர்ந்த துர்ப்பாக்கியமான விபத்து' என்றெல்லாம் எழுதுபவரை சோவியத் அரசும் அந்நாட்டு மக்களும் சகித்துக் கொண்டிருக்க வேண்டும், அவ்வாறு கூறும் நூல்களை அவர்கள் வெளியிடவேண்டும் என்று நியாய புத்தி படைத்த எவரும் எதிர்பார்க்க முடியாது.

இதேபோல் பாஸ்டர்நாக்கின் நூல்கள், சோவியத் நாட்டில் வெளியிடப்படவில்லை என்று கூறுவதும் சரியல்ல. நோபல் பரிசு பெற்ற சர்ச்சைக்குரிய அவரது நாவலான 'டாக்டர் ஷிவாகோ'வும்கூட, சோவியத் நாட்டில் முதலில் வெளியிடப்படவில்லை எனினும், பின்னர் வெளியிடப்பட்டது. பாஸ்டர்நாக் ஒரு சிறந்த கவிஞர். சோவியத் நாட்டில் அவரது கவிதைகள் இன்னும் மதிக்கப்படுகின்றன; வெளியிடப்படுகின்றன. எனவே சோவியத் நாட்டில் கருத்துச் சுதந்திரத்துக்கு இடம் இல்லை எனக் கூறுவது சரியல்ல.

சென்னை
10–8–76 சிதம்பர ரகுநாதன்

☐ இரண்டாம் பரிசு பெற்ற 'ராஜேஷ் பெண் பார்க்கிறான்' என்ற கதையில் பெண் பார்க்கும் படலத்தில் ஆண்களுக்குத்தான் முழு உரிமை, பெண்கள் சந்தையில் விலைபேசப்படும் ஆடு மாடுகள் என்ற அவல நிலையை மாற்றி, நினைத்தால் பெண்களும் இதில் சம உரிமை பெற வாய்ப்புண்டு என்ற கருத்து வலியுறுத்தப்பட்டிருப்பது பாராட்டுக்குரியது.

பெங்களூர்–21
13–8–76 தே. மாயம்பெருமாள்

☐ புது உலகம் கண்டேன் கட்டுரையில் மேற்கு நாடுகளிலும் சோவியத் யூனியனிலும் கட்டட அமைப்புக்களில் காட்டியுள்ள அக்கறை, கட்டுக்கோப்பு, திறமை, பயன் இவற்றைப் படிக்கும்போது ஒரு சந்தேகம் எழுகிறது. இங்கு வந்து நம் வாரியங்களுக்குப் புகழ்மாலைகளை வாரியிட்டுப் போன மேலை நாட்டுப் பிரமுகர்கள் என்னதான் எண்ணியிருக்கிறார்கள் நம்மைப் பற்றி?

கம்பரசம்பேட்டை
8–8–76 பத்மா பாலு

# பாரத் ஓவர்ஸீஸ் பாங்கில் உங்கள் டிபாசிட்டுகளுக்கு அதிகப்படி வட்டி கிடைக்கிறது




சதவிகிதம் கூடுதலான வட்டி
5 வருடங்கள் வரையிலுள்ள
டெர்ம் டிபாஸிட்டுகளுக்கு




சதவிகிதம் கூடுதலான வட்டி
சேமிப்பு கணக்குகளுக்கு

கீழ்கண்ட அட்டவணையை கவனமாகப் படியுங்கள்:

| | |
|---|---|
| சேமிப்புக் கணக்குகள் | 5¼% |
| **டெர்ம் டிபாஸிட்டுகள்** | |
| 14 நாட்கள் வரை | வட்டி இல்லை |
| 15 நாட்கள் முதல் 45 நாட்கள் வரையான டிபாஸிட்டுகளுக்கு | 3¼% |
| 46 நாட்கள் முதல் 90 நாட்கள் வரையான டிபாஸிட்டுகளுக்கு | 3¼% |
| 91 நாட்கள் மற்றும் அதற்கு மேல், ஆனால் 6 மாதங் களுக்குக் குறைவான டிபாஸிட்டுகளுக்கு | 5¼% |
| 6 மாதங்கள் மற்றும் அதற்கு மேல், ஆனால் 9 மாதங்களுக்குக் குறைவான டிபாஸிட்டுகளுக்கு | 6¼% |
| 9 மாதங்கள் மற்றும் அதற்கு மேல், ஆனால் 1 வருடத்துக்கு குறைவான டிபாஸிட்டுகளுக்கு | 7¼% |
| 1 வருடம், மற்றும் அதற்கு மேல் ஆனால் 3 வருடத்துக்குக் குறைவான டிபாஸிட்டுகளுக்கு | 8¼% |
| 3 வருடம் மற்றும் அதற்கு மேல் ஆனால் 5 வருடம் (உட்பட) வரையான காலத்துக்குரிய டிபாஸிட்டுகளுக்கு | 9¼% |
| 5 வருடங்களுக்கு மேற்பட்ட டிபாஸிட்டுகளுக்கு | 10% |

ரெகெரிங் டிபாசிட்டுகளுக்கும் தக்கபடி அதிக வட்டி அளிக்கின்றன.

எங்கள் பாங்குக்கு விஜயம் செய்யுங்கள் —
எங்களது அன்பார்ந்த சேவை உங்களுக்கு திருப்தி அளிக்கும்.




## பாரத் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்

பதிவு அலுவலகம்: "ஆக்ஸ்ஃபோர்ட் ஹவுஸ்", மவுண்ட் ரோடு, சென்னை-600006

இந்தியா மற்றும் வெளி நாடுகளில் எல்லா முக்கிய நகரங்களிலும்
எமது கிளைக் காரியாலயங்களும், தொடர்பாளர்களும் உண்டு

மூன்றாம் பாகம்

# சேரமான் காதலி



கண்ணதாசன்

## முன்கதைச் சுருக்கம்

கி. பி. 754ம் ஆண்டில், இரண்டாம் சேரமான் பெருமாள் சேர நாட்டின் ஆட்சியைத் தம் மகன் மார்த்தாண்டவர்மனிடம் ஒப்படைத்துவிட்டுத் தல யாத்திரை செய்யப் புறப்படுகிறார். ரவிவர்மனின் சதியால், கொங்குநாட்டுப் படையும், பாண்டிய நாட்டுப் படையும் சேரநாட்டில் புகுந்து விட்டன. வஞ்சியின் கோட்டைவெளி ரணகளமாகிவிட்டது. நாராயண நம்பூதிரி சிறைப்படுத்தப்பட்டார். மார்த்தாண்டவர்மனும், அவன் மனைவி மெல்லிளங்கோதையும் தாவளி சகோதரிகளிடமே சரண் அடைந்து அவர்களின் உதவியால் நாட்டைவிட்டு இரகசியமாக வெளியேறிக் காட்டுப் பாதையில் வெகு தூரம் ஓடி அகத்தீசுவரம் காட்டில் திருவேங்கடத்தான் வல்லபன் மகாமுனிவரின் ஆசிரமத்தை அடைந்தார்கள்.

தம் குமாரன் மார்த்தாண்டவர்மனைக் கடைசி முறையாகச் சந்தித்த அளவில் குலசேகர ஆழ்வார், திருவரங்கனின் திருவடியை அடைகிறார். இறைவன் அருளால், மார்த்தாண்டவர்மன் உயிர் பிழைத்ததை அறிந்த ரவிவர்மன், தன் சதித் திட்டங்களைக் கைவிட்டு அவனுடன் நட்புக் கொள்கிறான்.

ரவிவர்மன், நாராயண நம்பூதிரி, மார்த்தாண்டவர்மன், ஸ்ரீவல்லபர் ஆகியவர்கள் ஒன்றுகூடிப் பேசி, விக்கிரம சோழன் செய்து வைத்த உடன்படிக்கையின்படி 'திருவஞ்சைக்களம்' என்ற வஞ்சியைத் தலைநகராகக் கொண்டு பாஸ்கர ரவிவர்மன் மூன்றும் சேரமானாக ஆள்வது என்றும், திருவிதாங்கோட்டைத் தலைநகராகக் கொண்டு 'வேணாட்'டை மார்த்தாண்டவர்மன் ஆள்வது என்றும் முடிவாயிற்று.

இரு முடிசூட்டு விழாக்களும், மிகச் சிறப்பான முறையில் அதிவிமரிசையாக நடைபெற்றன....... இரண்டு நாடுகளுக்கும் பிரதான அமைச்சராக விளங்கிய நாராயண நம்பூதிரி யானையின் மீது ஊர்வலமாக அழைத்து வரப்பட்டார்.

ஊர்வலம் முடிந்தபோது, சூரியன் அஸ்தமனம் ஆயிற்று. இருள் பரவத் தொடங்கிய அந்த நேரத்தில் அராபிய நாட்டுப் பாய்மரக் கப்பல் சேரநாட்டுக் கடற்கரை மணலில் மோதி நின்றது. அந்தக் கப்பலிலிருந்து நாற்பது வயதான முகம்மதுவும் அவரது பேகமும், அவர்களது ரத்தினச் சிலை சலீமாவும் சேரநாட்டு மண்ணை மிதித்தார்கள்.

## அத்தியாயம் 1

# புதிய வரலாறு

சேர மண்டலத்தின் வரலாற்றில், புதுமையான மாற்றங்கள் ஏற்பட்டுத் துரிதமாக யாவும் செயல்படத் தொடங்கின.

மூன்றும் சேரமான் பெருமாள் என்ற பட்டப் பெயருடன் பாஸ்கர ரவிவர்மன் முடிசூட்டிக் கொண்டபிறகு தன்னுடைய ஆட்சியின் தொடக்கத்திலேயே மற்ற எல்லா மதத்தினர்களுக்கும் வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்து வந்தான்.

மார்த்தாண்டவர்மனைப் பகைத்துக் கொள்ள அவனுக்கு மனம் இல்லை. பாஸ்கர ரவிவர்மனுக்கு இன்னொரு விஷயத்தில் சிறிது கலக்கமும் இருந்தது. குலசேகர ஆழ்வாரிடம் பக்தியுள்ளவர்கள் மார்த்தாண்டவர்மனிடமும் அத்தியந்த அன்பு செலுத்தினர். அவர்கள் மனம் கோணாமல் இருந்தால்தான் உள்நாட்டுக் கலகம் ஏற்படாமல் இருக்கும். இந்த அரசியல் சூழ்ச்சியை மனத்தில் நன்கு பதிய வைத்துக் கொண்டவன் ரவிவர்மன்.

கி. பி. 798ல் வேணாடு தனியாகப் பிரிக்கப்பட்டு, மார்த்தாண்டவர்மனின் ஆட்சிக்கு உட்பட்டதும் அவனுக்கு வேணாட்டு அடிகள் என்ற பட்டப் பெயர் ஏற்பட்டது.

இரண்டாம் சேரமான் பெருமாள் திருமாலுக்கு அடியவராக இருந்தாலும் அவர் மகன் மார்த்தாண்டவர்மன் சேர நாட்டு மரபுப்படி சைவனாகவே வாழ்ந்து வந்தான். சைவனாக வாழ்ந்தாலும், எம்மதமும் சம்மதம் என்ற உயர்ந்த நோக்கத்துடன் எல்லாச் சமயத்தவரிடமும் அன்பும் ஆதரவும்

---

**ராஜாஜி சிந்தனை**

**சத்தியாக்கிரக வெடி!**

எந்த விஷயமாக இருந்தாலும் சத்தியாக்கிரக முறையைக் கையாள உரிமை உண்டு என்று எண்ணிவிடலாகாது. நாம் கூறுவது நியாயமாக இருந்தால்தான் அந்த ஆயுதத்தைக் கையில் எடுக்கலாம். ''நம்முடைய வழக்கு நியாயமில்லாவிட்டால் சத்தியாக்கிரக வெடி மருந்து வெடிக்காது போகும்'' என்று மகாத்மாஜி கூறினார். சத்தியாக்கிரக வெடி மருந்து சரியானபடி வெடிக்காது என்பது உண்மைதான். ஆயினும் அதைக் கையாள்பவருக்கும் அருகிலிருப்பவருக்கும் பலவிதமான கஷ்டங்கள் உண்டாகவே செய்யும். ஆதலால் அத்தகைய சோதனைகளைச் செய்பவர்கள் விசேஷமான பொறுப்புடையவர்களாவார்கள்.

— நீண்டாமை என்ற கட்டுரையில்

---

## காய்கனி விநாயகர்!



சென்னை மாநகரில் உள்ள திருவல்லிக்கேணி சுந்தர மூர்த்தி விநாயகர் கோவிலில் ஆண்டுதோறும் விநாயக சதுர்த்தி யன்று முழுதும் காய்கனிகளாலான விநாயகர் திருவுருவம் சிறப்பாக உருவாக்கப்படுகிறது. முகமும், துதிக்கையும் சுரைக் காயால் அமைக்கப்படுகின்றன. கைகள் பெங்களூர் கத்திரிக் காயாலும், விரல்கள் கோவைக் காயாலும், தொந்தி பறங்கிக் காயாலும் ஆக்கப்படுகின்றன. காராமணிக் காயால் ஸர்ப்பக் கொடியும், பீர்க்கங்காய் அங்குசமும் உண்டாக்கப்படுகின்றன. விநாயகப் பெருமானின் வாகனமாகிய மூஞ்சூறு கத்திரிக்காய், காராமணிக்காய், கோவைக்காய் முதலியவைகளால் ஆக்கப் படுகிறது. வெள்ளை முள்ளங்கி தந்தம். அவரை, வெண்டைக் காய், பீன்ஸ் ஆகியவற்றால் கணபதியின் கழுத்தை அலங்கரிக் கும் மாலை உருவாகிறது. வாழைப் பழங்கள், ஆப்பிள், எலுமிச்சை ஆகியவை விநாயகரின் தலை, கிரீடம் ஆகின்றன. முட்டைக் கோஸின், ஒவ்வொரு வெண்மையான இலையைக் கொண்டு ஆடை அலங்கரிக்கப்படுகிறது. காய்கனிகளால் உரு வாக்கப்படும் இவ்வதிசயக் காய்கனி கணபதியை விநாயகசதுர்த்தியன்று பக்தர்கள் கூட்டம் கூட்டமாக வந்து வழிபடுகின்றனர். இக்காய்கனி விநாயகர் வீற்றிருந்த திருக்கோலத்தில் காட்சி அளிக்கிறார். விநாயக சதுர்த்தியன்றும் தொடர்ந்து இரண்டு நாட்களும் இவ்வதிசயக் காய்கனி விநாயகரை இவ்வாலயத்தில் கண்டு களிக்கலாம்.

— ரமா ராமநாதன்

(மேலட்டையில் விநாயக சதுர்த்தியை முன்னிட்டு ஆனைமுகத்தோனை வண்ணச் சித்திரமாக வழங்குபவர்: மணியம்செல்வன்)

காட்டி, பண்பில் சிறந்தவனாக ஆட்சி செலுத்தி வந்தான். திருமால் அடியார் களையும், திருமால் திருப்பதிகளையும் நல்ல முறையில் பேணிப் பாதுகாத்து வந்தான். திருவிதாங்கோட்டில் (திருவாங்கூர்) உள்ள பத்மநாப சுவாமி கோயிலுக்கு வேண்டிய அளவுக்கு நிபந் தங்கள் செய்து வைணவ பக்தர்களின் நன்மதிப்புக்குப் பாத்திரனாக வாழ்ந் தான். தந்தையைப் போலவே இவனும் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கினான்.

ஒருவாறு சேரநாட்டு அரசியலில் பெரிய கொந்தளிப்பு ஏற்பட்டு அதன் காரணமாகச் சேர ராஜ்யம் இரண் டாகப் பிரிந்து இரு ஆட்சி பீடங்கள் அமைக்கப்பட்டு இப்பொழுது பூரண அமைதி நிலவியது.

ஆனால் இந்த அமைதி நெடுங்காலம் நிலைத்திருக்கவில்லை.

இரண்டாகப் பிரிந்த சேரநாடு மேலும் பல குழப்பங்களுக்குள்ளாகி, ஒன்பது நாடுகளாகப் பிரிந்து விட்டது.

கேரள நாட்டில் மருமக்கள் தாயம் வந்து பலமாக வேரூன்றியது. இதனால் சமூகத்தில் பல மாற்றங்கள் ஏற் பட்டன.

இதையும்விட அதிசயம், கேரள நாட்டு மக்களில் ஒரு பகுதியினருக்கு 'மாப்பிள்ளா' என்ற பட்டம் வந்து சேர்ந்தது தான்.

வரலாற்றுப் பெருமைவாய்ந்த மேற் கூறிய இம்மாற்றங்களையெல்லாம், இப் பகுதியில் பின்வரும் அத்தியாயங்களில் விரிவாகப் பார்க்கப் போகிறீர்கள். அதற்கு முன்பு கேரள நாட்டு அரசியல் வானில் மின்னல் கீற்றெனத் தோன்றிய ஓர் அதிசய மாறுதலைக் கொஞ்சம் பார்ப் போம். அது அரபிக் கடலில் மிதந்து வந்து கொண்டிருந்த அந்த பாய்மரக் கப்பலில்தான் வந்து கொண்டிருந்தது.

கேரளத்தின் இருபகுதிகளுக்கும் பிர தான மந்திரியாக விளங்கிய நாராயண நம்பூதிரி யானை மீது ஏறி ஊர்வலம் வந்து முடிந்தபோது, செக்கர் வானம் பரந்து, மேற்றிசையில் கதிரவன் அஸ்த மித்து, செவ்வந்தி மகளுக்கு அவன் சுற்றிவிட்ட நீலவண்ண ஆடை நெருப் பாய் ஜ்வலித்தது. ஊர் மக்கள் ஊர் வலம் முடிந்ததும் உற்சாகமாக அன் றைய நிகழ்ச்சிகளைப் பற்றிப் பேசிக் கொண்டே கூட்டம் கூட்டமாக அவர வர்கள் இல்லம் திரும்பினர்.

அந்தி நேரத்தில், இருள் பரவத் தொடங்கிய அந்த வேளையில் அராபியப் பாய்மரக் கப்பல் சேரநாட்டுக் கடற் கரை மண்ணில் உராய்ந்து நின்றது. அது அந்த மண்ணில் இனிவருங்காலத் தில் நிகழப் போகும் பல அதிசய மாறுதல்களுக்கு அடிக்கல் நாட்டியது போல் இருந்தது. கரைதட்டிய கப்பலி லிருந்து ஜகஜ்ஜோதியாகத் தீப்பந்தங் கள் எரியத் தொடங்கின. கப்பலில்



## வேண்டுகோள்

வங்கக் கடலில், கிரேட் நிகோபார் தீவினில், கேம்ப்பெல் பே துறைமுகத்தில், பல்வேறு துறை ஊழியர்கள் வழிபட்டு வரும் அருள்மிகு முருகனுக்கு எளிமையாகவும், சிறப்பாகவும் ஆலயம் கட்டிக் கும்பாபிஷேகம் செய்ய நிச்சயித்து ஆக்கப் பணிகளைத் தொடங்கியுள்ளனர்.

கடல் கடந்த இடத்தில் இறைவனின் சிறப்பு மேலும் பெருகத் திருப்பணியில் பங்கு பெற விரும்பும் ஆன்மீக நேயர்கள் இயன்ற பொருளுதவி புரிந்து பேரருள் பெறவேண்டுகிறோம்.

The secretary, Sri Murugan Temple, Camp bell bay, 744302 Great Nicobar Island.

வேலை செய்யும் ஆட்களின் ஆரவாரம் ஆழ்கடலின் அலைஓசையையும் எதிர்த்து நின்றது. கப்பலின் மேல்தளத்திலிருந்து சிறு சிறு 'ஆபத்து உதவிப் படகுகள்' பலமான தாம்புக்கயிறுகளின் மூலம் கடலில் இறக்கி விடப்பட்டன. அவற்றில் வீரர்கள் பலர் மளமளவென்று இறங்கினர். மகம்மூது, அவரது மனைவி, அவர்களின் அன்புக்குரிய ரத்தினச் சிலை — அழகி சலீமா ஆகிய மூவரும் வெகு பத்திரமாக ஒரு படகில் இறக்கி விடப்பட்டனர். படகு நகர்ந்ததும் ஆடி ஆடிக் கரையை அடைந்தது. மூவரும் கீழே இறங்கினர்.

வானப் பந்தலில், விண்மீன்கள் கண் சிமிட்டி வடிவழகி சலீமாவுக்குக் கட்டியம் கூறி வரவேற்றன; சற்றுத் தூரத்தில் தெரிந்த பாதி மதி வெள்ளி ஓடம் போல் மிதந்து, நட்சத்திர ஒளியின் முத்து விதானத்திலிருந்து சலீமாவின் பொன்னுடலுக்கு நிலாக் கதிரினால் சல்லாப் புடவை சுற்றி அவள் மேனிக்கு மேலும் வனப்பை அளித்தது. கடற்கரையில் வீசும் காற்று அந்தக் காரிகையின் மேல் பட்டுக் கேரள நாட்டுக்குள் புகுந்து ஆனந்தபரவசத்தில் மக்களைத் தீண்டி அவர்களையும் மெய்சிலிர்க்க வைத்தது.

நீண்ட நெடுநாள் கடற் பிரயாணத்தில், அலுத்துப் போயிருந்தாலும் அந்த வன தேவதை சலீமாவின் முகம் அதிகாலையில் பனித் துளியில் முக்குளித்த தாமரை மலரைப் போல் துல்லியமாய்ப் பிரகாசித்தது. சலீமாவின் நெற்றியைப் போன்றிருந்த பிறைநிலா தான் அதற்கு ஒப்பாகமாட்டோமென்று அறிந்து திடீரென்று நாணம் உற்றதோ! பின், ஏனோ அது வெண்முகில் திரையில் தன்னைப் புதைத்துக் கொண்டுவிட்டது!

சலீமாவைப் பெற்றவர்கள் சற்றுக் கவலை தோய்ந்த முகத்துடன் அங்கும் இங்கும் பார்த்தபடி இருந்தனர். ஆனால் சலீமா....! கானகத்தில் துள்ளித் திரியும் மான் குட்டியின் தனியானதோர் உற்சாகத்துடன் அந்தக் கடற்கரை மணற்பரப்பில் சுற்றிச் சுற்றி வந்து தன்னை மீறிய மகிழ்ச்சியில் திளைத்தாள் — தாயின் கவலை அறியாத மகவைப் போல் அவள் உள்ளத்தில் இனந் தெரியாத இன்ப உணர்ச்சி உதித்து உடலெங்கும் பரவி அவளைப் பரவசப்படுத்தியது.

எதிர்பாராதவிதமாக, அராபியக் கப்பல் அந்த இடத்தில் வந்து மண் திட்டில் மோதியதில் முகம்மதுவும் அவன் மனைவியும் சற்றுக் கலங்கித்தான் போனார்கள். திடீரென்று முன்பின் அறியாத ஒரு புதிய பூமியில் வந்து அவர்கள் கால் பாவியது ஓர் அதிசய நிகழ்ச்சிதான். முகம்மதுவின் கவலையெல்லாம், மனைவியையும் பேரழகுப் பெட்டகமான அருமை மகள் சலீமாவையும் இந்த இருள் பரவும் நேரத்தில் எங்கு அழைத்துப் போவது என்பதுதான்.

கடற் காற்றின் சுகம் அவர்களைக் கனவுலகத்துக்கு இட்டுச் சென்றது. வானத்து வீதியில் உல்லாச பவனி வந்த பிறை நிலா கடல் அலைகளில் தன் வெண்ணிலாவைப் பொழிந்து அதைப் பாற்கடலாக மாற்றும் இரசவாத வித்தையைச் செய்து கொண்டிருந்தது.

விருந்தோம்பலில் இணையற்று விளங்கிய நம் பாரத புண்ணிய பூமியின் பெருமையை உயர்த்தும் விதத்தில், கடற்காற்று, அராபியக் கப்பல் பிரயாணிகளின் பிரயாணக் களைப்பைப் போக்குவதில் முனைந்து வேகமாகச் செயல்பட்டது.

கடற்காற்று அவர்களுக்கு நல்வரவு கூறி, 'ஓ'வென்று முகமன் வார்த்தைகள் பேசி உபசரித்தது.

திசை தெரியாமல் வந்த கப்பல் நல்ல வளமான பூமியில் கால் ஊன்றிவிட்டது தெரியாவிட்டாலும், முகம்மதுவுக்கும், அவர் மனைவிக்கும் மட்டற்ற மகிழ்ச்சியும், இனம் தெரியாத ஓர் அமைதியும் மனத்தில் பொங்கி எழுந்தன.

தூரத்தில், ஊருக்குள்ளிருந்து பற்றியெரியும் சுளுந்துகளுடன் மக்கள் பலர் கடற்கரையை நோக்கி ஓடி வருவது தெரிந்தது. (தொடரும்)



Born : 25-3-1925 - Died : 29-8-1972

In fond and affectionate memory of

Smt. RENGAMONY

Beloved wife of S. Padmanabhan
Affectionate mother of
JANA and KANNA

# படித்தோம்; சொல்கிறோம்!










1. பறவை உலகம்-அட்டை

2. நம்மாழ்வாரும் ஸ்ரீமந் நாதமுனிகளும்.

## பறவை உலகம்

உலகில் எதிர்ப்படும் எத்தனையோ பிரச்னைகளுடன் போராடும்போது, 'சுதந்திரப் பறவையாக ஆனந்தமாய்ப் பறந்து கொண்டிருக்க மாட்டோமா' என்று வாழ்க்கையின் ஏதோ ஒரு காலகட்டத்தில் எண்ணிப் பாராதவர் இருக்க முடியாது.

ஆனால் பறவை இயலை ஆராய்ந்தவர்களோ நமக்குள்ளதை விட அதிகமான பிரச்னைகள் பறவைகளுக்கு உண்டு என உணர்த்துவர். இந்தப் பிரச்னைகளைச் சமாளிக்க அவை காட்டும் வீரமும் விடா முயற்சியும் நம்மை வெட்கித் தலைகுனியச் செய்யும்.

உதாரணமாகச் சில இனப் பறவைகள் இடப் பெயர்ச்சியை முக்கிய இயல்பாகக் கொண்டிருக்கின்றன. ஆயிரக்கணக்கான மைல்கள் பயணப்படுகின்றன. சில சமயம் சென்ற வழியிலன்றி வேறு வழியில் திரும்பினாலும் திசை தப்பித் தவிப்பதும் இல்லை, காலக் கெடுவை மீறுவதும் இல்லை. ஐரோப்பாவிலிருந்து ஆப்பிரிக்காவுக்கும் சைபீரியாவிலிருந்து இந்தியாவுக்கும் பறவைகள் வருகின்றன. இப்பயணங்களுக்கு முன்னேற்பாடாக அதிகமாக உணவை உண்டு அவை கூடுதலாக ஓர் அடுக்குக் கொழுப்பை உடலில் சேர்த்துக் கொள்கின்றன. இது தான் பறந்து செல்லும் நாட்களின்போது அவற்றுக்கு உணவாகும்.

இப்படி ஒன்றா இரண்டா? எத்தனையோ விநோதங்களைப் பொதுப்படையாகவும் பிறகு பறவைகளை வகைப்படுத்தி ஒவ்வொன்றிடமும் காணப்படும் பல அதிசயப் பழக்க வழக்கங்களையும் விரிவாகவும் ரசமாகவும் கூறுகிறது இந்த நூல். தமிழாக்கம் தெளிவாயிருக்கிறது.

விளக்கங்கள் இருக்கட்டும். இதில் அச்சாகியுள்ள ஏராளமான பறவைகளின் வண்ணப் படங்களைப் பார்த்துக் கொண்டிருந்தாலே நேரம் போவது தெரியாது. திரும்பத் திரும்பப் பார்த்து ரசிக்கச் சொல்லும்.

பறவை நோக்குதல் என்பது இயற்கை அன்பர்களின் ஒரு பொழுதுபோக்கு. சக்தி வாய்ந்த ஒரு பைனாகுலரும் விடுமுறையில் மலை வனாந்தரங்களை வளைய வரும் மனமும் இருந்தால் போதும். இந்தப் பொழுதுபோக்கினால் கவரப்படாத மனத்தையும் இந்தப் புத்தகம் நிச்சயம் கவரும். —வி ரா.

ஆசிரியர்: ஸலீம் அலி, லயீக் ஃபதஹ் அலி; தமிழாக்கம்: எம். வி. இராஜேந்திரன்.

பிரசுரம்: நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா, புதுதில்லி 110016. விலை: ரூ. 18–75.



## சுந்தரிகளும் சுந்தரன் மார்களும்

சாகித்ய அகாதமி பரிசு பெற்ற இம் மலையாள நாவல் பெயரிலேயே அழகைச் சேர்த்துக் கொண்டிருக்கிறது. மலையாள ''மாத்ரு பூமி'' இதழில் தொடர் கதையாக வெளிவந்து ஆயிரக் கணக்கான வாசகர் களை ஆனந்தத்தில் ஆழ்த்தியது.

''இதில் வருகின்ற அத்தனை கதா பாத்திரங்களும் — பெண்களும் சரி, ஆண்களும் சரி — அவலட்சணமான அமளிகளில் ஆட்படும்போதுகூடத் தங்களது உணர்ச்சி பூர்வமான இதயங்களால் அழகிகளாகவும், அழகர்களாகவுமே தோற்றம் அளிக்கிறார்கள். இயல்பாகவே மனிதர்கள் அத்தனை பேரும் அழகிகளும், அழகர்களுமே. இதில் என்ன சந்தேகம்?'' என்கிறார் இந்நூலாசிரியர் தம் முன்னுரையில்.

முதல் அத்தியாயத்தில் பூரண கர்ப்ப வதியான குஞ்சுக்குட்டி எந்நேரத்திலும் பிரசவித்துவிடலாம் என்ற நிலையில், நடக்க முடியாமல் நடந்து செல்கிறாள். பள்ளிக்கூட வாத்தியார் ராமன் நாயர் அவளைத் தற்செயலாகச் சந்திக்கிறார். ஒரு கையில் லாந்தருடன் இன்னொரு கையால் குஞ்சுக் குட்டியை அணைத்தபடி தம் வீட்டுக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கிறார். அந்தி வேளையில் அந்தச் சாலை எப்படி இருக்கிறது என்பதை ஆசிரியர் வாயிலாகக் கேட்போம்:

''அந்திப் போதில் மஞ்சள் வெய்யிலும் செங்கதிர்களும் மறைந்து கொண்டிருந்தன. மூன்றாம் திங்கள் வெளிறிப் போயிருக்கிறது— வேளை போது தெரியாமல் வந்து நிற்கும் விருந்தாளியைப் போல். மறையும் கதிரவன்; எழும்பும் மதியம். இறப்பும் பிறப்பும் எதிர் எதிரே நோக்கி நிற்கின்றன.''

இந்த வர்ணனை, கதைப் போக்கையே உருவகப் படுத்திய மாதிரி கதை அமைகிறது. பள்ளிக்கூட மாஸ்டர் ராமன் நாயர் குஞ்சுக் குட்டியை அணைத்தபடியே நடந்து கொண்டு கடந்த கால நினைவுகளில் லயிக்கிறார். அதுவே கதையாகி விடுகிறது. ஆசிரியரின் கதை சொல்லும் உத்தியே பிரமாதமாக இருக்கிறது.

ராமன் நாயரின் பூர்த்தியாகாத மனோரதம் கதையின் கரு. முதல் காதல் மலர்ந்த வேகத்திலேயே மடிந்து விட்டது. அந்தக் காதல் நினைவைப் புதைத்த மயானத்திலேயே குடில் அமைத்துக் கொண்டு வாழ முடியாது என்று நிர்மாணித்த ராமன் நாயர் ஊரை விட்டே வெளியேறுகிறார். அதற்குப் பிறகுதான் கதையில் சூடு பிடித்துப் பல மாற்றங்கள் நிகழ்கின்றன.

இரண்டாவது உலக மகாயுத்த காலத்தில் கேரளம் எப்படி இருந்தது என்பதை நூலாசிரியர் கதா பாத்திரங்களின் அசைவைக் கொண்டே அருமையாக விளக்குகிறார். கேரள நாட்டுக்கே உரிய பல பிரச்னைகள், அங்கு வேரூன்றிய பொது உடைமைத் தத்துவம் ஆகியவை யெல்லாம் அம்மண்ணின் மணத்தோடு கதை மணமும் பரப்புகின்றன.

பெரிய நவீனத்தைத் தமிழில் மொழி பெயர்த்திருக்கும் திரு ரா. சௌரிராஜன் (சௌரி) பாராட்டுக்குரியவர். மொழி பெயர்ப்பு வாடையே தெரியாமல் மூல நூலைப் படிப்பது போலவே சுவையாகச் செய்திருக்கிறார்.

மலையாள ஆசிரியர்: பி. கி. குட்டிக் கிருஷ்ணன் — ''உரூபு''. பிரசுரம்: சாகித்ய அகாதமி, ரவீந்திர பவன், புதுதில்லி—1. விலை: ரூ. 15—00. —லோமாகஸ்

## வகுளாபரண சடகோபர்

ஆழ்வார்களும் நாயன்மார்களும் மெய்ப் பொருளே உருவெடுத்து வந்ததாகப் போற்றப்படுகிறார்கள். அவர்களில் தலையாகக் கருதப்படுபவரே நம்மாழ்வார் என்னும் வகுளாபரண சடகோபர். சங்கர பகவானே ஆதி சங்கரராக உருவெடுத்து வந்ததாக, சிவ பெருமானே திருமூலராக அவதாரம் எடுத்து வந்ததாகக் கூறுவது போல, நம்மாழ்வார் விஷ்ணு சொரூபமாக வணங்கப்படுகிறார்.

எல்லாக் குழந்தைகளையும் போல அவர் பிறந்தாலும் அந்தக் குழந்தைகளைப் போல் அவர் வளர்ந்து வாழவில்லை. வேதத்தின் சாரத்தைத் தமிழில் வடித்துக் கொடுத்த பெருமை அவரையே சாரும். அழகு கொழிக்கும் அவரது தமிழ் நடையில் மயங்கிக் கம்பநாடாரே,

'துறவாதவர்க்குந் துறந்தவர்க்குஞ்
சொல்லவே ஈரக்கு
மறவாவவையின் கொராயிர நிற்க வந்தோ
சிலர் போல்
மறவாதியர் சொன்ன வாசகமா
மலட்டாவைப் பற்றிக்
கறவாக் கடப்பரெங் கேன் பெறவோ
தங்கள் கைவளிப்பே

என்று கூறியதாக வழங்கி வருவதை ஆசிரியர் குறிப்பிடுகிறார். ஒன்றுக்கு ஏற்றம் தருவதற்கு இன்னொன்றை இறக்கித்தான் ஆக வேண்டும் என்பதில்லை. 'திருவாசகத்துக்கு உருகாதவர் ஒரு வாசகத்துக்கும் உருகார்' என்ற வழக்கை நினைவில் கொண்டால் தமிழ் இலக்கியத்தின் பக்தி வளத்துக்கு சைவம் வைணவம் இரண்டுமே இரண்டு ஒளியூட்டும் கண்கள் என்பது விளங்கும்.

ஸ்ரீ சடகோபனின் பிறப்பு வளர்ப்பிலிருந்து அவரது வாழ்க்கையை சமஸ்கிருத — தமிழ் மொழியின் உதவியைக் கொண்டு படம்

பிடித்துக் காட்டும் இந்த நூல் வெகு நேர்த்தியாகத் தயாரிக்கப் பட்டிருக்கிறது. பல திருப்பதிகளிலும் உறையும் தெய்வங்களின் அற்புதமான வண்ணப் படங்கள் இந்நூலுக்கு அணி சேர்க்கின்றன.

திருமாலின் மறு அவதாரமாகக் கருதப் படும் நம்மாழ்வார், பூதத்தாழ்வாரைத் திருமுடியாகவும், பொய்கை, பேயாழ்வார்களைத் திருக்கண்களாகவும் பெரியாழ்வாரைத் திருமுகமாகவும் திருமழிசையாழ்வாரைத் திருக்கழுத்தாகவும் குலசேகராழ்வாரையும் திருப்பாணாழ்வாரையும் திருக் கைகளாகவும், தொண்டரடிப் பொடியாழ்வாரைத் திருமார்பாகவும், திருமங்கையாழ்வாரைத் திரு நாபியாகவும், மதுரகவியாழ்வாரைத் திருவடியாகவும் கொண்டவராகப் போற்றப்படுகிறார் எனில் அவர் பூர்ணாவதார மகிமையைப் பாடும் இந்த நூலும் போற்றத் தக்கதேயாகும். ஸ்ரீ என். ராமசுவாமி அய்யங்கார் இதைப் பக்தி பூர்வமாக அணுகிப் பெரு முயற்சி எடுத்து எழுதியுள்ளார். இந்த நூலை வெளியிட்டுள்ள சுந்தரம் சாரிடீஸ் அவரது முயற்சி பரிமளிக்கும்படியான வகையில் நூலை வெளியிட்டிருக்கிறது. விலைமதிக்க முடியாத பணி என்பதனால்தானோ என்னவோ இந்நூலுக்கு விலை குறிப்பிடப்படவில்லை.

பிரசுரம்: சுந்தரம் சாரிடீஸ், சென்னை-6.

ரா. வீ.




"சாக்லெட் தருகிறீர்களே தாத்தா! உங்களுக்குப் பேரன் பிறந்துட்டானா?"

"ஊஹும்! என்னுடைய கார்டை ஆயிரமாவது தடவையாகப் புதுப்பிக்க வந்திருக்கேன். அதைக் கொண்டாட!"



"திரைக்குப் பக்கத்தில் டி.வி. எதற்கு?"

"திடீரென்று பிலிம் 'கட்'டானால், டி.வி. யில் படம் காட்டி, விசிலடிச்சான் குஞ்சுகளை மகிழ்விக்கலாம்!"

## இட்டிலி தர்மம்!



திருவண்ணாமலை கோயில் வாயிலில் பல பிச்சைக்காரர்களையும் கூடையில் இட்டிலி, சாம்பார், சட்டினியுடன் நிற்கும் கிழவிகளையும் பார்க்கலாம்.

பக்தர்களிடம், "பிச்சைக்காரர்களுக்கு இட்டிலி வாங்கிப் போட்டுத் தர்மம் பண்ணுங்கள்" என்று கிழவிகள் கூறுவார்கள்

நாலணாவைக் கிழவிகளிடம் கொடுத்து நாம் ஐந்து பிச்சைக்காரர்களைக் காட்டியதும் அவர்களுக்கு இலை போட்டுத் தலா ஓர் இட்லி சாம்பார் அல்லது சட்டினி பரிமாறிவிட்டுப் போய்விடுவாள் கிழவி. ஏழைக்கு உணவு கொடுத்த திருப்தி பக்தர்களுக்கு ஏற்படுகிறது.

-- லலிதா செல்லப்பா

## நல்ல காரியம்!

ஓர் எழுத்தாளர் எழுதிய புத்தகத்துக்குப் பிரான்ஸில் பரிசு கொடுத்திருக்கிறார்கள். புத்தகத்தின் தலைப்பு: "நான் எப்படி எழுதுவதை நிறுத்தினேன்?" -- பிரான்ஸ் சாயர் -- முத்து

## உலகிலேயே பெரிய......



சிகாகோவில் உள்ள மருத்துவமனைதான் உலகிலேயே பெரியதாகக் கருதப்படுகிறது. 5,600 படுக்கை வசதிகளைக் கொண்ட இந்த மருத்துவமனை எட்டு மருத்துவக் கல்லூரிகளை நடத்துகிறது. அவற்றில் மூவாயிரம் மாணவர்கள் படிக்கிறார்கள். -- பிளிட்ஸ்

-- ஆர்.எம்.

# சிலம்புச் செல்வம்

ம.பொ.சி



இளங்கோவடிகள் கண்ணகியையும் கோவலனையும் களவியல் காதலர்களாக அறிமுகப்படுத்தாமல் மணவறையில்தான் முதன் முதலில் சந்திக்கும் மணமக்களாக அறிமுகப் படுத்தக் காரணம் என்ன?

கண்ணகி, தன் வாழ்க்கையின் முடிவில், பத்தினித் தெய்வமாகிறாள். அப்படித் தெய்வமாகப் போகும் நங்கையைக் களவியலிலே புகுத்தி, திருமணத்துக்கு முன்பே உளப் புணர்ச்சியையும், உடற்புணர்ச்சியையும், ஏற்பட்டுவிட்ட காதலர்களாகக் காட்ட அடிகளுக்கு எப்படி மனம் வரும்?

கண்ணகி — கோவலர் திருமணத்திலே சடங்குகள் நிகழ்ந்தன. மாமுது பார்ப்பான் மறை வழி காட்டிட, மணமக்கள் தீவலம் வந்தனர். மணவறையிலே அந்தணர் ஒருவர் தீ வளர்ப்பதும், மணமக்கள் அந்தத் தீயை வலம் வருவதும் முதன் முதலாகச் சிலப்பதிகாரத்தில்தான் சொல்லப்படுகின்றன. இதனால், இந்தச் சடங்குகள் தமிழருக்கு உரியவை அல்ல என்று பேசப்படுகின்றது. சிலம்புக்கு முற்பட்ட இலக்கியங்களிலே மணமக்களை மணவறையில் வைத்து, அங்கு நிகழும் சடங்குகள் கூறப்படவில்லை. அதனாலேயே சிலம்பில் சொல்லப்படும் திருமணச் சடங்குகள் தமிழருக்கு உரியவை அல்லவென்றோ, ஆரியருக்கு உரியவை என்றோ சொல்லி விடுவதற்கில்லை.

இந்தச் சடங்கு ஆரியரிடமிருந்து வந்தது தான் என்றாலும், அதனை நான் வரவேற்கிறேன். தீ வலம் வருவதும், அதையொட்டி நிகழும் வேறு சில சடங்குகளும் இந்துக்கள் அனைவருக்கும் உரிய பொதுச் சடங்குகளாகி விட்டன. அந்தப் பொதுமையை அழிக்க நான் விரும்பவில்லை. தேசிய ஒருமைப்பாட்டை நாம் உண்மையிலேயே ஏற்பவர்களானால், தமிழரையும் பிற இனங்களைச் சார்ந்தவர்களையும் ஒருமைப்படுத்தும் பழக்க வழக்கங்களை — அவை மதவழிப்பட்டவைகளானாலும்—அழித்துவிடக் கூடாது.

கற்பை நெருப்போடு ஒப்பிடுவது உண்டு. கற்பைக் கடைப்பிடித்து வாழும் பத்தினியரும் நெருப்புக்கு ஒப்பானவரே. அதனால்தான், கண்ணகியை ''கற்புக்கனலி'' என்கின்றனர். அந்தக் கற்புக்கனலி அந்தண புரோகிதர் வளர்த்த சிறு தீயை வலம் வருகிறாள் என்றால், அது இளங்கோவுக்கு வியப்புக்கு உரிய நிகழ்ச்சியாகப்படுகிறது. ஒரு தீ இன்னொரு தீயை வலம் வருவது விந்தையாகப்படுகிறது.

அக்கினித் தெய்வமே கண்ணகியின் ஆணையை ஏற்று நாளை மதுரையை எரிக்கப் போகிறதென்றால், அப்படிப்பட்ட பத்தினித் தெய்வம் அந்தணர் வளர்த்த சிறு தீயை வலம் வருவது விந்தைதானே!

சோழ நாட்டுக்கு ஒரு குறை இருந்தது. முன் எப்போதோ ஒரு முறை சோழ மன்னன் கரிகால் வளவன் இமய மலையைக் கடந்து, அதற்கு அப்பாலுள்ள நாடுகளையும் தன் புலிக் கொடியின் கீழ் கொண்டு வர நினைத்து, படை திரட்டிப் புறப்பட்டுச் சென்றான். இமயப் பிடரி வரை ஏறினான். அதற்கு மேல் போக அவனாலும், அவன் படை வீரர்களாலும் இயலவில்லை. இமயத்தின் பிடரியிலே தன் புலிச் சின்னத்தைப் பொறித்து விட்டுத் திரும்பினான். அதனால், கண்ணகி — கோவலனாகிய மணமக்களைப் பார்த்து, ''இமயப் பிடரியில் உள்ள புலிச் சின்னத்தை, இமய உச்சியையும் கடந்து கொண்டு செல்லும் வீர மகனைப் பெற்றெடுப்பீர்களாக!'' என்று கூறி, மணமக்களை வாழ்த்துகின்றனர், திருமணத்தில் பாலிகை, திருவிளக்கு ஏந்தி நடக்கும் சிறுமியர்.

'' ... தங்கிய
இப்பால் இமயத்து
　　இருத்திய வாள் வேங்கை
உப்பாலைப் பொன் கோட்டு
　　உழையதா, எப்பாலும்
செருமிகு சினவேந்
　　செம்பியன்
ஒரு தனி ஆழி
　　உருட்டுவோம் எனவே.''

கண்ணகியுடன் கோவலன் இல்வாழ்க்கை நடத்தியது சில ஆண்டுகள்தாம். மாதவியோடுதான் அவன் பல ஆண்டுகள் வாழ்ந்தான். கண்ணகியுடன் கோவலன் நடத்திய இல்வாழ்க்கையை விரிவாகக் கூறவில்லை, இளங்கோ. கண்ணகியும் கோவலனும் முதல் இரவில் பள்ளியறையில் சந்தித்ததை ஒரு தனிக் காதையாகவே பாடியுள்ளார். அங்கும் கோவலன், கண்ணகியைக் காதல்உணர்வுடன் தான் வருணிக்கிறான். 'செக்ஸ்' என்று இந்நாளில் சொல்லப்படுகிறதே, அப்படி விரசமாக வருணிக்கவில்லை. கண்ணகியின் நெற்றியைச் சிவபெருமான் சடையிலிருந்த பிறைத் திங்களோடு ஒப்பிடுகிறான்; அவளுடைய கண்களுக்கு முருகப் பெருமானுடைய ஒளி மிகுந்த வேலாயுதத்தை உவமை காட்டுகிறான்; இந்திரனுடைய வஜ்ராயுதத்தை அவளின் இடைக்கு உவமை காட்டுகிறான்; காமன் தனது கரும்பு வில்லை இரண்டாகப் பிளந்து கண்ணகியின் இரு புருவங்களாகப் படைத்துவிட்டான் என்றும் வருணிக்கிறான். (தொடரும்)

(மயிலை இலக்கிய வட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.




# சரி, சரி... இரண்டும் சரியே

# பார்லே க்ராக்ஜாக்

# பிஸ்கட்டுகள்

## அனுபவம் புதுமை ரசித்திடும் கணமே!



REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# CLEVITE

RESEARCH HAS PROVED
**COPPER-LEAD**
TO BE THE RIGHT
COMBINATION
MATERIAL FOR



# HEAVY DUTY

## APPLICATIONS

In 50 years working with all materials, CLEVITE research has proved copper-lead to be the right combination material in the world for heavy duty applications.

Where in all cases, the test is in performance spread over many years, CLEVITE copper-lead have proved to be the best heavy duty engine bearings.





**BIMETAL BEARINGS LIMITED**
(in technical collaboration with Clevite Corporation, Cleveland, Ohio, USA)
**2, ARTS COLLEGE ROAD, COIMBATORE - 18**
A Unit Company of Amalgamations Group